*Kumaran̲*

*Āram 24, muttu 30*

*March 13, 1947*

Record no. 313

REGD NO. M. 1823

மலாயாவில் 12-சத
இந்தியாவில் 2-அணா

விளம்பரம்

ரோட்டின் ரோர்ட் விளம்பரம் முதலிய வைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ 1-8-0

வியாபார சம்பந்த மானது ரூ. 2-0-0

ஒப்பந்த விளம்பரத் திக்கு மானேஜருக் கெழுதவும்

# குமரன்

சந்தா விபரம்

உள் நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0
சிலோன் ரூ. 6-0-0
ஆறு மாதம் ரூ. 3-8-0

பர்மா, மலாயா முதலிய வெளிநாடு ரூ 1-க்கு ரூ. 8-0-0

வியாழன் தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 24 | மகளிர் இல்லம், விய மாசி 29உ. (13—3—47) | முதது 30

## மகளிர் இல்லத்தில் ஆண்டுவிழா

### கல்வி கனியெனக் கருதப்படுகிறது

### முத்தமிழும் முழங்கியது

கண்டனூர் சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் மெ. திருநாவுக்கரசு M. A. அவர்கள் பின்வருமாறு எழுதுகிறார்கள் :—

"இளமையிற் கல்" என்ற முதுமொழி நாம் அறிந்ததே. ஆயினும் அம் மொழியின்படி இன்று எல்லா இடங்களிலும் கல்வி கற்பிக்கப்படுகிறதா எனின் இல்லை யென்றே இயம்பலாம். மழலையர் மனத்தை அறிந்து, அவர்கள் உள்ளத்தினை உணர்ந்து, அதற்கேற்ப இனிய, எழிய முறையில் பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டும். இல்லையெனின், "விழலுக் கிறைத்த நீர்" போன்று, ஆசிரியரின் அயராதுழைத்த அரும்பெரும் பயன் அழிந்து, ஒழிந்து, தேய்ந்துவிடும். பள்ளி என்றால் பயந்து பதுங்கும் பான்மையில் படிப்பினைப் புகுத்தாது, கல்வி என்றால் கனியெனக் கருதும் வகையில் கல்வி கற்பிக்கப்பட வேண்டும். அப்போதுதான் பிள்ளைகள் வருங்கால உலகில் ஒரு பெரும் பேற்றினைப் பெறும் பெற்றி பெறுவர்.

கள்ளமற்ற உள்ளமுள்ள இளங் குழந்தைகட்கு கல்விச்சாலை யொன்று கவினுற நிறுவி, அதனைச் சீரிய முறையில் செம்மையுற நடாத்தி, குழந்தைகட்கு இன்றியமையாத பற்பல வசதிகளையும் வளனுற வகுத்தமைத்து அவர்களை ஏறுபோன்ற பீடுநடையுறச் செய்யவேண்டுமென்ற செயல் எழிதான தொன்றல்ல. அத்தகைய கல்விக்கு வேண்டிய வசதிகளையும், முறைகளையும் வகுத்து வழங்கினார் "மாண்டிசோரி" என்னும் மாண்புயர் அம்மையார். அவ்வம்மையாரின் முறைப்படி இன்றைய தமிழகத்தில் மிகச் சில பள்ளிகளே உள்ளன. அவற்றுள் உணவு, உறைவிட வசதியோடு அமைந்திருப்பது, அமராவதிபுதூரில் முருகப்பா அவர்கள் முயற்சியினால் நிறுவப்பட்டிருப்பதாகும்.

எட்டு ஆண்டுகட்கு முன்னர் பெருங் காடாகக் காணப்பட்ட இடம், இன்று சிறு ஊராக இருக்கிறது என்று கூறினால் அது உயர்வு நவிற்சியாகாது. தனியொரு மனிதனாக இம்முயற்சியில் முனைந்து உழைத்த, உயற்சியடைந்த முருகப்பா அவர்களின் செயல் போற்றற் குரியதாகும்.

பலனிற் பற்றின்றிப் பணிபுரியும் அன்னார் அமைத்த இப் பள்ளியின் ஆறுவதாண்டுவிழா 2—3—47 ஞாயிறன்று பிற்பகல் 4·15 மணிக்குத் துவங்கியது. அன்றைய விழா, பல அறிஞர்கள் புடைசூழ்ந்திருப்ப அன்பர் திரு. கோனூர் கிலக்கிழார் அவர்களைத் தலைவராகக்கொண்டுதண்ணளியுற்றுத் திகழ்ந்தது. 'ஒருபிடி அவலில் ஓவல் அகப்படாதா" என்பதுபோல பல்லாயிரவர் குழுமியிருக்கும் விழாப் பந்தலொன்றில் தமிழறிஞர் ஒருவர் எங்கே இருக்கிறரென்று கருவித்தேடி அலைந்து காண வேண்டி நிலை ஏற்படும். ஆனால் அன்றைய விழாவில், தமிழ் நாட்டின் பற்பல பகுதிகளினின்றும் வந்த தமிழ்மக்கள் 500 பேருக்கு மேல் குழுமி இருந்தனர். பள்ளிப் பிள்ளையின் இறைவணக்க இசைக்குப் பின்னர் எல்லோரையும் வரவேற்றுப் பேசினார் முருகப்பா. அதன் பின்னர் தலைவரவர்களின் பேருரை நிகழ்வுற்றது.

இவை நடந்தபின்னர் பிள்ளைகளின் ஆடல் பாடல்கள் அழகுற நடைபெற்றன. சிறப்பாக அம்மேடையில் முத்தமிழும் முழங்கிய தென்றே மொழியலாம். அவ்வளவு இனிமையுடையதாக அமைந்திருந்தது அன்றைய ஒவ்வொரு நிகழ்ச்சியும்.

இன்றைய தமிழர் இல்லங்களிலே, வயது வந்த பிள்ளைகள் கூட தங்கள் பேரும், ஊரும் தெரிவிக்க இடலாத நிலையில் இருக்கும் இக்காலத்தில், மகளிர் இல்லத்தில் பயிலும் குழந்தைகள்—அதிலும் சிறப்பாக 5 வயதுக் குட்பட்ட இளம் குழந்தைகள் தங்களது பெயர், ஊர் முதலியவைகளைச் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்டனர். இம் முயற்சி வரவேற்கத் தக்கதே. அவர்கள் அத்துடன் அமைந்தனரா! இல்லை கம்ப இராமாயணம், திருக்குறள், புறநானூறு, நாலடியார், நளவெண்பா, நாலாயிரப் பிரபந்தம், தேவாரம் இன்னோரன்ன பிற இனிய இலக்கியங்களிலிருந்தும் பாடல்களைத் தனித்தனியாகப் பாடிக் காண்பித்தனர்.

"குழலினிது யாழினிது என்பர் தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்" என்றதனை விரித்துரைக்க வந்த நிகழ்ச்சிகளோ அன்று நிகழ்ந்தவை எனக் கருதும் படியாக இருந்தது. குழலையும், யாழையும் மறந்து, மழலையர் மொழியில் மயக்குற்ற தாய் தந்தையர்கள் ஈன்ற பொழுதிற் பெரிதுவந் திருப்பர் என்பது விளங்கா நிற்பதாகும். "அப்பனை அடி; ஆத்தாளை உதை" என்ற மொழிகளைப் பயிற்றாது மேற்கூறிய நூல்களிலிருந்து பல பகுதிகளை எடுத்துக்கொடுத்துப் பயிற்றும் முறை உச்சிமேல் வைத்து மெச்சிப் புகழத் தக்கதாகும்.

"உளியிட்ட கல்லையும், ஒப்பிட்ட சாந்தையும், ஊத்தையறம் புளியிட்ட செம்பையும்" போற்றாது பழையன கழித்துப் புதியன புகுத்திக், காலத்திற்கேற்ற கருத்தினைக்கடைப்பிடித்து, ஒரே மாதிரியான வெள்ளைக்கதாடையில் கொடி பிடித்து "அச்சமில்லை" என்ற பாடலையும், தேசிக விநாயகம் பிள்ளையின் கொடிப் பாடலையும் பாடச் செய்திருந்தது பெரிதும் போற்றற்குரியதாகும்.

"ஏட்டுப் படிப்பில் மட்டும் பயனில்லை" என்பதை உணர்ந்து, நாட்டு மக்களுக்கு உணர்ச்சியை, எழுச்சியை, ஊக்கத்தைபெல்லாம் அளிப்பதற்காக "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா" என்ற பாடலை நடிப்போடு பாடினர். மொழியறிவோடு உலகியல் அறிவும் பெற்றிருத்தல் வேண்டும். இல்லையேல் இன்றும்அந்தும் நாருமலரினை ஒப்பர் மக்கள். அம் முறையில் அமைக்கப்பட்டிருந்தது "ரயில்வே ஸ்டேஷன்" என்ற நிகழ்ச்சி.

"மெய்த் திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத் துறவோன்" ஆகிய சடையப்ப வள்ளலைப் பற்றிய சிறு நாடகம் நடிக்கப்பட்டது. கையினால் நெய்த ஆடை வாங்குவாரற்றுக் கிடந்தது. இதனைக் கண்ட நெசவாளி, மன முடைந்து, பசி வெகுண்டு உடல் தளர்ந்த நிலையில் "நெய்த ஆடையுடன்நெருப்பில்வீழ்ந்து இறப்பேன்" என்று வஞ்சினம் கூறுமிடத்தில் கம்மையும் அறியாது "வருங்கால உலகில் கைத்தொழில்கள் போற்றப்பட வேண்டும்; ஆதரிக்கப்படவேண்டும்" என்ற உணர்ச்சி கம்மை வந்து அடைகின்றது.

பெருமையும் சிறுமையும் தத்தம் செய்கைகளுக்கேற்ப வந்தடையும் என்ற அரிய கருத்தினை எளிய முறையில் "பரமானந்தா வைகுந்தா" என்ற பாடலின் மூலம் அறிவுறுத்தியது அழகாக அமைந்திருந்தது.

உலகில் வாழும் மக்களிடையே ஒன்றுக்கொன்று முற்றிலும் முரண்பாடுடைய கருத்துக்கள் அளவிறந்தன என்பதனையும், அனைத்தையும் ஒருவன் ஏற்று நடத்தல் எளிதல்ல என்பதனையும் ஆசிரியர் 'ஜீவன்" சித்தரித்த "வாத்தியார் சமாளிப்பு" என்ற கவிதை நாடகத்தின் வாயிலாக எடுத்துக் காட்டினர் குழந்தைகள்.

"மங்கையர் கண் புனல் பொழிய" என்ற நந்திக் கலம்பகப் பாடலை நயக்கத் தக்க முறையில் அபிநயத்துடன் நடித்துக் காட்டியதை எம் வாழ்க்கையில் என்றும் மறவேம். அவர்களது சொல் தூய்மை எவ்வளவு போற்றினும் தகும். கேட்டார் பிணிக்கும் தகையவாய்ப் பாடப்பெற்ற அப் பாடல் எம் கருத்து அனைத்தையும் தன்னகத்து இழுத்தது மிகவும் வியப்புடைத்து.

"அங்குயிரும் இங்குடலும் ஆன மழைக் காலம்
அவரொருவர் நாமொருவர் ஆன கொடுங் காலம்"

என்ற ஈற்றடிகளை அம் மாணவிகள் இசைக்கும்போது தம்மை மறந்து செயலற்று இன்புற்றோர் எண்ணற்ற மக்களாவர். அப்பொழுதெல்லாம் என் மனத்தில் ஒரு ஏக்கம் உண்டாயிற்று. அதுதான் "இனி இதுபோன்ற ஒரு சிறந்த பெரு நிகழ்ச்சியைக் காணப் போவது எக்காலமோ" என்பது! அக் காலமும் விரைவில் வந்திடுக.

(5-ம் பக்கம் பார்க்க)

# முத்தொள்ளாயிரம்

## விட்ட பாடல்கள்

முத்தொள்ளாயிரம் என்ற நூல் கிடைக்கவில்லை. மற்ற இடங்களில் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ள பாடல்களைப் பொறுக்கியதில் 108 பாடல்கள் கிடைத்தன. அதனை ஒரு நூலாக்கி ரசிகமணி டி. கே. சி. அவர்கள் வெளியிட்டுள்ள பதிப்பு தமிழ் மக்களது செல்வப் பேழையாக இருக்கிறது. அந்த 108 பாடல்களுள் 99 க்கே அவர்கள் உரையும், விளக்கமும் எழுதியுள்ளார்கள். எஞ்சிய ஒன்பது பாடல்களைப் பற்றி "இந்தப் பாடல்களுக்குப் பொருள் விளக்கமோ திருத்தமான பாடமோ கிடைத்தால் அடுத்த பதிப்பில் உபயோகித்துக்கொள்ள உதவும்" இதுமாதிரி அறிவித்திருக்கிறார்கள். அந்த ஒன்பதுள் மூன்று பாடல்களுக்கு விளக்கமும் உரையும் ஒரு அன்பர் "ஈழகேசரி" பத்திரிகையில் எழுதியிருக்கிறார். அது வருமாறு:—

கண்டி—தாலத மாளிகையில் நடந்த ஒரு சம்பவம்: புத்த தந்தத்தைப் பொதுசன பார்வைக்கு வைத்திருந்தார்கள். ஆண்—பெண், வாலிபர், வயோதிபர், ஏழை—பணக்காரன்.... என்ற பேதமின்றிப் பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் அங்கு வந்து கொண்டிருந்தார்கள். ஜன சமுத்திரம் அங்கு அலைமோதிக் கொண்டிருந்தது. வெப்பம், பசி களைப்பு முதலிய வேதனைகளையும் பொருட்படுத்தாத, காட்சணக்காகக் காத்துக் கிடந்தவர் பலர். "எட்டாத பழம் புளிக்கும்." என்ற போக்கில், 'வெற்றிகரமாகப் பின்வாங்கினவர்'களும் உண்டு!

பிரயாண அலுப்பையும் பாராது காலைத்தான் அலைந்த 'ஏமாந்த சோணகிரி' ஒருவர் சொன்னார், "இந்த ஆட்களின் தலையிலே ஏறிப் போய்ப் பார்த்தாலென்ன?" என்று. அவருடைய அதிருப்திதான், இந்த அதி தீவிரமான அதிகப் பிரசங்கித் தனத்தைக் கிளப்பிவிட்டிருக்க வேண்டும்.

பார்க்கப் போனால், ஒரேயொரு பல்லு. அதுவும் பொய்ப் பல்லோ என்று சந்தேகிக்கும்படியான நிலையில் இருக்கிறது. ஆனால், ஜனங்களின் ஆவலும் பயபக்தியும்....ஆம். ஆச்சரியமான சம்பவம்தான்!

ஃ ஃ ஃ

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் மதுரையிலும் இப்படியான ஒரு சம்பவம் நிகழ்ந்தது:

பாண்டிய மன்னன் ஒருவன் மதுரை வீதியில் பவனிபோகிறான், பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணனந்தம் போல ஜனக் கும்பல் அவனைச் சுற்றித் தொடருகிறது. தூரத்திலே ஒரு யுவதி இந்தக் காட்சியைப் பார்த்துப் பரவசங் கொள்ளுகிறாள். அவள் வேறு யாருமில்லை. அந்தப் பாண்டியனைக் காதலித்த ஒரு பெண்: தலைவி! அவளுக்கு எப்படியாவது பாண்டியனை அணைந்தின்புற வேண்டுமென்ற ஆவல் விஷம்போல ஏறுகிறது. ஆனால் ஜனங்கள் மட்டும் அவளுக்கு இடம் விட்டுக் கொடுப்பதாயில்லை. தங்கள் தங்கள் பாட்டில், இராசபவனியில் லயித்து நிற்கிறார்கள். அவர்களுக்கு அரசன்மேல் அவ்வளவு விஸ்வாசம்! இந்த நிலையில் தலைவி என்ன செய்வாள்? பக்கத்தில் நிற்கும் தோழியிடம் தனது மனக்குறையை வாய்விட்டுச் சொல்லுகிறாள்:

அறிவாரார்? யாமொருநாள்
பெண்டிரே மாகச்
செறிவார் தலைமேல்
நடந்து—மறிதிரை
மாட முரிஞ்சும்
மதுரையார்கோமானைக்
கூட ஒருநாள் பெற!

மடங்கியெழும் (வைகைநதி) அலைகள், மாடத்தைத் தேய்க்கும்படியான வேகத்தோடு பாய்கிற—மதுரை மன்னனை, நாங்கள் ஒருநாளைக்குப் பெண்களாகவே, இங்கு கூடிக் குவிந்திருக்கிற ஜனங்களின் தலைகளில் ஏறி நடந்துபோய்ச் சேர்வதற்குரிய வேலையை அறிந்தவர்கள் யார் என்பது தலைவியின் ஆவேசங்கலந்த கேள்வி.

ஆவல் எவ்வளவுக்குத் தூண்டுகிறதோ அவ்வளவுக்கு ஆத்திரங் கொள்வதும் மனித இயற்கை. சடலங்களான அந்த ஜனங்களோ, தமது போக்கைத் தடுத்துக் கொண்டிருக்கும் மாடங்களோடு மல்லுக் கட்டிக் கொண்டிருக்கும்போது ஆம், இந்தச் சரவஸ்துவான பெண் மட்டும் பொறுத்திருப்பாளா? "எப்படியும் இந்த மூடப்பிரகிருதிகளான ஜனங்களின் தலையில் ஏறிப் போயாவது என் காதலனை அணையத்தான் வேண்டும்" என்று சொல்வது போலிருக்கிறது அவள் பேச்சு.

"என் செயலைக் குறித்து, இந்த மனிதர்கள் 'ஆண்மாரி' ஆண்பிள்ளைத் தேவடியாள்' ........என்றெல்லா வக்கணை சொன்னாலும் பாதகமில்லை. நாங்கள் இந்தத் திட்டத்தை நிறைவேற்றியே ஆக வேண்டும்!" அலட்சியமாகப் பேசுவதாகவும் தொனிக்கிறது.

"அறிவாரார்?" என்ற வினா "இந்த ஜனங்கள் அறிந்திருப்பார்களானல், இதுவரையில் எனக்கு வழிவிட்டிருக்க மாட்டார்களா?"—என்ற ஏக்கக் குறிப்பையும் எதிரொலிக்கிறது.

ஃ ஃ ஃ

பாயும் படுக்கையுமாக நோயுற்றிருக்கும் ஒருவனுக்கு, அவனுடைய பிறந்தநாட் கொண்டாட்டம் அவ்வளவாகச் சுவை கொடாது, விருந்துகள் கேளிக்கைகள் ஒன்றிலும், தான் ஈடுபட முடியாமல் இருக்கிறதே என்ற ஏக்கம், அவனுடைய நோயை இன்னும் அதிகமாக்கவும் கூடும்.

இவ்விதமான தர்மசங்கடம் ஒரு பெண்ணுக்கு ஒருமுறை நேர்ந்ததாம். அந்தப் பெண்ணும் பாண்டியனையே கணவனாகப் பாவனை செய்யும் ஒரு 'பிரகிருதி'யாம். காதற்பிரேமை, அவளது உடல் நலத்தைப் பரிசோதிக்கத் தொடங்கியதாம், போருக்குப்போன பாண்டியன், வெற்றியிருதோடு வரும் நாளை எதிர்பார்த்து எதிர்பார்த்து அவள் மனம் சலித்துவிட்டதாம். ஒரு நாள் மாலை, காமநோயால் இளைத்துப் போன உடம்போடு அவள் படுத்திருந்தாளாம். 'எரிகிற நெருப்பிலே எண்ணெயை ஊற்றியதுபோல' அந்த நேரத்தில் வாடைக்காற்றும் வளைத்தடிக்கத் தொடங்கியதாம். தோழி, அவளது பரிதாபமான நிலைக்கு இரங்கிப் பின்வருமாறு தனக்குள்ளே முணுமுணுக்கிறாள்:

பிணிகிடந் தார்க்குப்
பிறந்தநாள் போல
அணியிழை யஞ்ச
வருமால்—மணியானை
மாறன் வழுதி
மணவா மருள்மாலைச்
சிறியோர் வாடை
சினந்து!

மணிகள் கட்டிய யானைப் படையையுடைய பாண்டியன் எங்கள் தலைவியை மணந்து கொள்ளாமல் இருக்கிற மையல் விளைக்கும் இந்த மாலை வேளையிலே, வாடைக்காற்றானது, பிறந்தநாள் வருவதுபோல, அழகிய ஆபரணங்களை யணிந்த தலைவி பயப்படும்படியாகச் சீறிச் சினந்து வருகிறது என்பது தோழியின் இரக்கம் நிறைந்த பேச்சு.

"வாடையே, சந்தர்ப்பமறியாமல் எங்கள் தலைவியிடம் வந்து உனது திருவிளையாடலை நடத்துகிறாயே. இது உனக்குத் தகுமா?"—என்பது குறிப்பு.

தனது போர் யானைகளால் ஜனங்களுக்கு ஆபத்து நேரிடாதபடி, அவற்றின் கழுத்திலே மணிகளைக் கட்டிக் கொண்டு செல்லும் இந்தப் பாண்டியனது தர்ம ராச்சியத்திலே, 'பனையால் விழுந்தவனை மாடேறி மிதித்ததுபோல' பாண்டியனையே நினைத்துருகும் எங்கள் தலைவியை மேலும் வெதுப்புகிறதே வாடைக்காற்று இந்தக் கொடுமை தீரப் பாண்டியன் அவளை மணம் புரிந்து கொள்ளானா?—என்பது தொனிப்பொருள்.

'மாறன்' 'வழுதி' என்று ஒரே பொருளில் வரும் சொற்களை அடுக்கிப் பேசினாலும், அது பாண்டியனிடத்து வைத்திருக்கும் மதிப்பை வெளிப்படுத்துவதற்கு மனஞ் செய்த தூண்டுதல் ஆகலாம்.

ஃ ஃ ஃ

"கனகசபாபதி தரிசனம் ஒருகால்
கண்டாற் கலிதீரும்....'

என்று பாடிப் பரவசங்கொண்ட நந்தனுக்கு, அத் தரிசனத்தால் எவ்வளவு சாந்தி கிடைத்த தென்பதைப் புராணங்களில் படித்தறிந்திருக்கிறோம். அதுபோல, கோதை யென்ற சேர மன்னனது இராச பவனியைப் பார்த்துத் தனது காதல் வேட்கையைத் தணிக்க நினைத்தாளாம் ஒருத்தி. ஆனால், இங்கு விளைவு விபரீதமாக முடிந்ததாம். "சேரனைப் பவனியிற் கண்டால், எல்லாப்பெண்களுக்கும் பசலை மாறிவிடுகிறது. எனக்கு மட்டும் தீராத நோயாய் இது இருக்கிறதே" என்று அவள் அங்கலாய்ப்பதைப் பாருங்கள்.

வாமான்தேர்க் கோதையை
மான்தேர்மேற் கண்டவர்
மாமையே யன்றே
இழப்பது—மாமையிற்
பன்னூறு கோடி
பழுதோ என் மேனியிற்
பொன்னூறி யன்ன
பசப்பு!

தாவிப் பாய்கின்ற குதிரைகள் பூட்டிய தேரையுடைய கோதையை, தேர்மேல் வைத்துப் பார்த்த பெண்கள், தங்களது பசலையை இழந்துவிடுவார்கள். ஆனால், என் மேனியில், பொன் ஊறியது போன்று படர்ந்திருக்கும் பசலை மட்டும், அவர்கள் மேனியில் உள்ளதைக் காட்டிலும் பல நூறு கோடி மடங்கு பழுதானதோ!—என்பது அவளது சந்தேக வினா.

காதலுக்கும் காமத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அந்தப் பெண்ணின் அந்தரங்கக் காதல், அளவுக்கு மிஞ்சிய காமவெறியைக் கிளப்புகிறது. நிறைவேறாத அந்த இச்சையின் பிரதிபலிப்பாக, நெஞ்சு முகம் முதலிய இடங்களிலெல்லாம் தேமல் படருகிறது. ஆனால், 'அரசன் அவளைக் கடைக்கணிக்காத வரையில் அது எப்படிக் குறையும்? அரசன் மேலுள்ள பிரேமையால், அவனைக் குறைகூறாது, தன்னையேதான்—தனது துர்அதிர்ஷ்டத்தையே—நொந்து கொள்ளுகிறாள்!

கோதை என்னை மணந்து கொள்ளான்-என்பது குறிப்பு.

### திரு. வல்லத்தரசு விடுதலை

பொது அமைதி பராமரிப்பு அவசரச் சட்டப்படி, சில தினங்களுக்கு முன்பு தேவகோட்டையில் கைது செய்யப்பட்ட ராமனாதபுரம் ஜில்லா சங்கத் தலைவரும், அ. இ. கா. க. மெம்பருமான திரு. கே. எம். முத்துச்சாமி வல்லத்தரசையும் மற்று இருவரையும் விடுதலை செய்ய சர்க்கார் உத்திரவிட்டு அதன்பேரில் மூவரும் 6-3-47ல் விடுதலை செய்யப்பட்டது









சங்கத் தமிழ்.

# தமிழர் கண்ட இன்பநிலை

[பண்டித. தி. ராமானுஜம். வித்வான்]

இரவு, நடுநிசிக்கு இறக்கப் போகிறான் ஒரு நோயாளி. அவனைக்குறித்து அன்றுமாலை, 'நிலை எப்படியிருக்கிறது' என்று கேட்டால்—'இருக்கிறான்' என்பார்கள்! ஆனால் அவனது இருப்பினை அதே நேரத்தில் நோயின்றி ஓடியாடித் திரிந்து மகிழும் மற்றொருவனது 'இருப்பிறேடு' ஒப்பிட முடியுமா? முடியாது. அந்த நோயாளியை இருக்கிறான் என்றது இறக்கவில்லை என்ற காரணம் கருதியே அல்லது வேறில்லை. நோயின்றி உண்டு, உடுத்து, ஓடி, ஆடிக் களித்திருப்பவனது இருப்பு, அப்படி ஆகாது: சாதாரண மனிதர்கள் எப்படி இருத்தல் வேண்டுமோ, அப்படி நின்று இன்பம் துய்த்துக் கவலை இன்றி நன்கு வாழ்ந்துகொண்டிருக்கிறான்-என்பது கருத்தாகும். எனவே இந்த இரண்டு எடுத்துக்காட்டுக்களில் இருத்தல் இருவேறு ஆழ்ந்த பொருள்களில் காணப்படுகிறது. ஒன்று, எப்படியிருத்தல் இயல்போ அல்லது எப்படி இருக்கவேண்டுமோ அப்படி இருந்து மகிழும் இருப்பு ஆகும். மற்றொன்று இறந்து போகவில்லை என்பதால், இருக்கிறான் என்று சொல்லுமாறு உள்ள, கேவலம் செயலளவில் இருப்பு ஆகும்.

இதேமாதிரி, 'மனிதவாழ்வினையும், நாம் வேறுபடுத்திக் காணவேண்டும். உயிரோடு வாழ்கிறவர்கள் எல்லோரையும், வாழுகிறார்கள் என்று சொல்லிவிடுவதற்கு இல்லை. உண்டு, உடுத்தி உறங்கி வீணே கழியும் சாதாரண மனிதவாழ்க்கையைக் காட்டிலும், ஒரு இலட்சியத்தைப் பின்பற்றி அதற்கு என உடல், பொருள், ஆவி என்ற மூன்றினையும் தந்து, சுயநலத்தைப் பொருட்படுத்தாது பிறர்க்கென வாழும் ஒரு பெரியாரது இலட்சிய வாழ்க்கை எவ்வளவோ வகையில் மேம்பட்டது. சாதாரண மனித வாழ்க்கையானது அவ்விலட்சிய வாழ்க்கையின்முன், 'இருக்கிறான்' என்று நோயாளியது இருப்பினைச் சொன்னமே—அதேபோல், வாழுகிறான் என்று சொல்லளவிலே, உபசார வழக்காய்ச் சொல்லுமளவிற்கே நின்று, பெருமை இன்றிக் கழியும் இழிவுடையது. 'இலட்சியவாழ்வு, வாழுபவன், பிறக்கும்போதே 'புகழோடு தோன்றுகிறான். வாழுங் காலத்தில் இசைபடவாழுகிறான் இறக்கும்போதும், தீதில் யாக்கையோடு மாய்ந்து புகழால் என்றும் இருப்பவனாகிறான். இப்படியாக ஒரு இலட்சியத்திற்காக வாழும் ஒருவனது வாழ்வு, பிறப்பு, வளர்ப்பு, இறப்பு என்ற மூன்று நிலையிலும், சாதாரண மனித வாழ்க்கையினின்று வேறுபட்ட இயல்புடையதாக இலக்கியங்களிலே காட்டப்பெறுகின்றது. இப்படி வாழுபவரது வாழ்க்கையையே 'வாழ்வாங்கு வாழ்த'லாகும் என்று வள்ளுவர் சுட்டுகிறார். அது மட்டும் இல்லை. இச்சீரிய வாழ்வினர், மேற்பார்வைக்கு மனிதவடிவினராய்த் தோன்றினாலும் வானுறையும் தெய்வத்துள் ஒப்பவைத்துப் போற்றப்பட வேண்டியவர்கள் ஆவார்கள் என்றும் தன் தெய்வத்திருமறையிலே சொல்லியிருக்கிறார்.

இப்படி மனிதனைத் தெய்வநிலைக்கு ஏற்றும் சீரிய இயல்பினது, இலட்சியம்—நோக்கம் — குறிக்கோள்தான் என்பதை மிக நன்றாக உணர்ந்த பழங்காலத் தமிழர்கள் அங்க இலட்சியமாக எதனைக்கொண்டிருந்தார்கள் என்பது அடுத்து நோக்குதற்கு உரியது. இயற்கையோடு இயைந்து பொருந்தி அதனை அநுசரித்துப் பயன் படுத்தி, இனபுற வாழ்ந்து பயன் துய்த்த பழந்தமிழர்கள், அத்தகைய, சீரிய வாழ்க்கையின் குறிக்கோளாக இன்பத்தையே கண்டுணர்ந்து போற்றினர் என்பதில் நாம் வியத்தற்கு உரியது ஒன்றுமில்லை.

இயற்கையையே கடவுளாகக் கண்ட அவர்கள், இன்பமே என்னுடைய அன்பே என்றுதான் மோக்ஷ உலகினையும் பேரின்பமயமாகவே உள்ளது எனப் பேசினர். அறத்தாலும், பொருளாலும் அடையத் தக்கது இன்பமே ஆகும்; அவ்வின்பம் ஒன்றுதான் இவ்வுலகத்தில் தலையாய குறிக்கோள் மனிதனுக்கு என்பது உணர்த்தும் வகையில் 'அறம் பொருள் இன்பம், என உறுதிப்பொருளை முறைப்படுத்தியும் வைத்துள்ளனர். இவை பெரிதில்லை, இன்பத்தின், 'தோற்றம் வளர்ச்சி பெருக்கமுறை முதலிய பல வேறு நுட்பமான செய்திகளை எல்லாம் தவறாது கண்டுணர்ந்து, பழந்தமிழ் இலக்கியங்களிலே போற்றிப் பேணிவைத்துள்ள அழகு மகிழ்ந்து பாராட்டற் பாலது.

அழகு—ஆர்வம்—இன்பம் என்பன மூன்றும் ஒன்றுடன் ஒன்று நெருங்கின இயைபுடையனவாகும். எனவே, எதிலும் 'அழகுணர்ந்து, ஆர்வமுறப் பேணிப் போற்றும் தன்மையுடையோர்க்கு உலகிலே இன்பம் விளைதல், ஒருதலை. இதனை நன்கு கண்டு பழகிய நம் முன்னையோர், இயற்கையையே அழகின் வடிவமாகக் கண்டு, அவ்வழகு நிரம்பிய இவ்வுலகினைப் 'பொய்' என வெறுக்காமல் ஆர்வமுறப் போற்றி மகிழ்ந்து, எல்லாப்படியாலும் இதனை இன்பமாகக் கண்டு வாழ்வினைப் போற்றியவர்களாய் இருந்து வந்தனர். ஒவ்வொன்றும், எப்படி எப்படி அமைதல் வேண்டுமோ அப்படி அப்படி அமைந்து நிற்பதிலே அழகுணர்ச்சி அரும்பும். அழகிய பொருள் ஒன்றினைக் கண்டால், அதனை நாம் அடைந்து சிறத்தல் வேண்டும் என்று ஆர்வம் பிறக்கும்: அந்த ஆர்வத்தின் பயனாக, முயன்று அதனைப் பெற்ற அளவிலே, பெற்றோம் என்ற மனநிலையால் ஏற்படும் மகிழ்ச்சியின் முடிவு எல்லையிலே 'இன்பம்' சிறக்கும். எனவே, விரும்பிய பொருள் கைகூடுதலிலே மட்டும் இன்பம் இல்லை. அதனால் ஏற்படும் மன மாறுதலிலே—நிறைவிலேதான் இன்பம் உண்டு என்பதனை நாம் உணருதல் தகும். "இன்னுமை இன்பம் எனக்கொள்ளின் ஆகும் தன் ஒன்னார் விழையும் சிறப்பு" என்ற வள்ளுவர் துன்பத்தை இன்பமாகக் கருதும் மனநிலை பெறவேண்டும் என்ற கருத்தினை வற்புறுத்தும்போது, துன்பமும் இன்பமும் ஒரு மனநிலையே ஒழியப் பிறிதில்லை என்ற இயல்பினை அவர் நன்குணர்ந்தவராதல் தேறலாம். பிற்காலக் குமரகுருபரரும், "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே" என்று கூறிச் சென்றார். எனவே 'இன்பம்' என்பது விரும்பிய பொருள் கைகூடுவதிலே இல்லை. கைகூடி அதன் பயனால் ஏற்படும் 'சிந்தை நிறைவிலே, ஏற்படும் ஒருவித மனநிலையே ஆகும் என்பதனை தெளியக் காணுகிறோம்!

இவ் வின்பம், 'தனிமையிலே' அதாவது பிறிதொன்றின் சேர்க்கையின்றி உண்டாக மாட்டாது என்பதனையும் நாம் அடுத்தறிய வேண்டும்: தனிமையிலே உலகைவிட்டு, காடுவனங்களிலே திரிவதில் இன்பம் உண்டு என்று 'துறவு பூணுகிறார்களே' என்றால்—அது விஷயம் வேறு: அவர்கள் கலந்துறையும் இவ்வுலக இன்பத்தைத் துன்பமாக மாற்றிக் கண்டு இதனின்று விடுதலை பெறுவதே இன்பம் என்ற கருத்தோடு செல்லுகிறவர்களாகையால், அப்படியே அத்துன்பத்தையும் இன்பமாக மாற்றிக் கண்டு பேசுகிறார்கள் என்றுதான் கொள்ள முடியும். இன்பம்—உண்மை இன்பம், இரு பொருட் சேர்க்கையின் பயனாகவே விளைதல் இயலும். இது மறுக்க முடியாத இயற்கை நியதி. உண்ணப்படும் பொருள் ஒன்று. உண்கிறவன் இரண்டு. உண்போன் உணவுப் பொருளைத் தன்னுடன், 'சேர்த்து ஒன்றுபடுத்தும் போது தான், அதாவது உண்ணற்றொழிலைத் தொடங்கிய பிறகுதான் 'உணவின் பய' னென்பது கிட்டும், இல்லையா? அதேபோல, கேட்கப்படும் நல்ல இசையும், கேட்பவனும் 'மனமொன்றி' நின்றபோது செவிக்கு இன்பம் ஏற்படும், இப்படியே எல்லா இன்பமும். ஒருவன், தன்னைத் தானே சிறந்தோன் என்று போற்றிப் புகழ்ந்து கொள்ளக் காண்கிறோம். அதில், ஓரளவு இன்பம் காணுவதாலேயே அவன் அவ்வாறு செய்கிறான். இல்லாவிட்டால் அவன் தற்புகழ்ச்சி செய்து கொள்ளுவானேன். ஆனாலும் 'தற்புகழ்ச்சி' குற்றம், துன்பம் தருவது என்று நூல்கள் கடிந்து ஒதுக்கக் காண்கிறோம். ஏன்? உண்மை இன்பம் ஒருதலையிலே உண்டாகாதல்லவா? அவனிடமே பிறிதொருவர் சென்று, 'நீ அறிவாளி' என்று புகழ்ந்தால் அவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சி, தானே புகழ்ந்து கொண்ட காலத்தில் இருந்ததினும், பன்மடங்கு சிறந்து காணும்.

இங்ஙனமான, 'இன்பவியல்பினை' நன்கு தெரிந்து, அதனையே 'அகம்' என்ற பெயரால் பாகுபாடு செய்து இலக்கணமும் பல துறைப்பட வகுத்துச் சென்ற பழந் தமிழர்கள், ஒத்த தலைவனும் தலைவியும் கண்டு கூடி மகிழும் பொழுதிலே ஏற்படுவது காதலின்பம் என்று அழகுபடப் பேசினர். ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் என்ற இருவரது கூட்டுறவிலே பிறந்து, பிறருக்கு இன்னபடி இருந்ததெனக் கூற முடியாததாய், அவரவர் உள்ளத்துணர்வாலேயே நுகரப்படுவதெதுவோ அது அகம் என, இன்பத்திற்கு விளக்கம் காட்டிய அவர்கள், 'நுண்மாண் நுழைபுலம்' எவ்வளவு உயர்ந்து காட்டுகிறது, காணுங்கள்! இவ்வுலக இன்பம் மட்டும்தான் இப்படி இரு பொருட் சேர்க்கையிலே உண்டு என்று கண்டார்கள் என்பதற்கு இல்லை தாங்கள் கண்ட இவ்வுலக இன்ப நிலைக்கேற்பவே, வீட்டுலக இன்பத்தையும் மாறுபடாத படி அமைத்துக்கொண்டார்கள் என்றும் தெரியலாம். உயிர் என்ற ஒன்று, கடவுள் என்ற இரண்டாம் பொருளோடு-தன் இயல்பு கெட இரண்டறக் கலத்தலிலேயே—வீட்டுலக இன்பம் உண்டு என்று இன்றளவும் எழுதிப்போற்றி வைத்து வருகின்றனர்.

மேலும், உலகிலே பொருள்களில் எல்லாம் அழகு நிறைந்திருக்கிறது. அழகை அநுபவிக்கும் உணர்ச்சி மனிதனிடம் அமைந்தும் இருக்கிறது. அவ் வழகிலே ஆர்வம் பிறந்து மனிதன் முயன்று, அவைகளைப் பெற்று மகிழும் மனநிலையிலே இன்பம் முகிழ்கிறது என்று கண்டோம்.

(தொடரும்)

# குமரன்

மகளிர் இல்லம்
விய௵ மாசி௴ 29௳


## ஆஸ்டல் வசதி

நகரத்தார் வசிக்கும் பகுதியினுள் மட்டும் ஒரு டசன் ஹைஸ்கூலுக்கு மேல் இருக்கின்றன. ஒரு மாமாங்கத்துக்கு முன் ஹைஸ்கூல்கள் பெருகியிருக்கவில்லை. படிப்பவர் தொகையும் சொற்பமாகவே இருந்தது. பொதுவாக உள்ளூரில் படிப்புக்கு இடையூறு பலவகையில் ஏற்படுகிறது. பண்டிகைகளும் கல்யாணம் முதலிய குடும்ப விசேஷங்களும் ஏராளமாக உள்ளன. ஒவ்வொரு விசேஷத்துக்கும் பிள்ளைகளை அழைத்துச் செல்ல வேண்டுமென்று விரும்புகிறார்கள். விசேஷங்கள் யாவும் சாப்பாட்டையே அடிப்படையாகக் கொண்டிருப்பதால் விசேஷங்களுக்குக் கூடும் பலருடைய வீடுகளிலும் அடுப்படி வேலை நிறுத்தப்படுகிறது. மாணவனுக்காக தனி சமையல் ஏற்பாடு, வீட்டில் செய்ய முடிகிறதில்லை. அது அவ்வளவு அவசியமாகக் கருதப்படவும் இல்லை. விசேஷக்கார வீடுகளுக்குச் செல்லும் மாணவர்கள் பள்ளிக்கூடம் போவதை விட விளையாடுவதில் பிரியப்படுவது இயல்பு. மாணவர்களுக்குப் படிப்பே ஒருகசப்பான விஷயம். கல்யாண வீடுகள் குழந்தைகளுக்கு ஒரு கொண்டாட்டகாரியம். பள்ளிக்கூடமும் விசேஷ வீடும் போட்டியிடும்போது பள்ளிக்கூடம் வெற்றியடைய முடியாதென்பது உண்மை. வசதியான பள்ளிக்கூடம் இப்பகுதியில் இல்லை என்ற காரணத்தைக் கொண்டும், விசேஷ காலங்களுக்கு அஞ்சியும் பிள்ளைகளை வெளியிடங்களுக்குக் கொண்டு போய்ப் படிக்கவைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. திருச்சி, புதுக்கோட்டை, மதுரை, சேலம், சென்னை, சிதம்பரம், மதனபள்ளி, திருநெல்வேலி போன்ற பல ஊர்களில் பிள்ளைகளை வைத்துப் படிப்பிக்க வேண்டியதாயிற்று. ஒரு பிள்ளைக்காக ஒரு வீடு. ஒரு சமையற்காரன், மேற்பார்க்க ஒரு ஆள், வண்டி, குதிரை, சமையல், சாப்பாடு. மாதம் 100, 150 செலவு. இதோடு மட்டுமல்ல. அந்தமார்க்கத்தில் யாத்திரை செல்லும் உற்றார், உறவினர், அறிந்தவர், தெரிந்தவர், அறியாதவர், தெரியாதவர் எல்லாரும் தங்குவார்கள். ஏறக்குறைய ஒரு குடும்பமே நடக்கும். இப்படி எத்தனையோ ஆபீசுகள். எவ்வளவோ செலவு!

இப்பொழுது இங்கேயே போதுமான அளவு ஹைஸ்கூல்கள் இருக்கின்றன. ஹைஸ்கூல்களிலேயே ஒரு போட்டிகூட ஏற்பட்டிருக்கிறது. ஒருவர் கோவில் கட்டினால் வேறொருவர் தர்மம் செய்ய நினைக்கும் பொழுது கோவிலையே கட்ட நினைப்பது வழக்கம். ஒருவர் காசியில் சத்திரம் போட்டால் மற்றொருவர் கயாவில் சத்திரம் போடுவார். இப்பொழுது தர்மம் செய்ய நினைப்பவர்கள் தங்களூரில் ஒரு ஹைஸ்கூல் இருக்க வேண்டுமென நினைக்கிறார்கள். மகிழ்ச்சிக்குரிய காரியம். கல்வி பயில்வோருக்கு இனிப் பஞ்சமில்லை. ஆனால் ஆஸ்டலைப் பற்றிய பஞ்சம் இருந்துகொண்டிருக்கிறது. கோனாபட்டு, கண்டனூர், நாட்டரசன்கோட்டை ஆகிய மூன்று இடங்களில் ஆஸ்டல் இருக்கிறது. பள்ளிக்கூடத்தை நடத்துவதே பெருந் தொல்லையான காரியம். அதோடு ஆஸ்டலையும் சேர்த்து நடத்துவது மிகக் கடினம் என்பது நாம் அறிந்ததே. என்றாலும் இரண்டும் சேர்த்து நடத்தப்பட வேண்டியது இன்றியமையாததாக இருக்கிறது. உள்ளூர்ப் பிள்ளைகளைத் தவிர சுற்றுப் புறத்திலுள்ள சிற்றூர்களின் பிள்ளைகள் வந்து படிப்பதற்கு ஆஸ்டல் வசதி மிக அவசியமாகும். பஸ் வசதி செய்தாலும் வண்டிகளை ஓட்டினாலும் நல்ல பலன் ஏற்படுவதற்கில்லை. இந்த முயற்சி இப்பகுதியில் ஒரு கண்காட்சியாகவே முடியும். ஹைஸ்கூல் நடத்துவதில் ஏற்படும் அனேக தொல்லைகளோடு அதன் நிர்வாகிகள் ஆஸ்டல் தொல்லையையும் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்று நாம் வற்புறுத்துகிறோம். இங்குள்ள ஹைஸ்கூல்களை நடத்துபவர்கள் தர்மத்துக்காகவே நடத்துகிறார்கள். சம்பளம் வாங்கி, கிம்பளம் வாங்கி லாபத்துக்கு நடத்தவில்லை என்பதை உலகம் நன்கு அறியும்.

ஆஸ்டல்கள் ஒருதிட்டத்துக்கு உட்பட்டு, கண்டிப்பாக நடத்தப்பட வேண்டும். இரவு பகல் காவலும் கட்டுப்பாடும் இருக்க வேண்டும். இதற்கிடையில் மாணவர்கள் உற்சாகம் அடையும்படி சுதந்திரமும் இருக்க வேண்டும். நல்ல உணவும் அதற்கு சரியான கட்டணமும் ஏற்படுத்த வேண்டும். இத்தனை ஹைஸ்கூல்கள் இங்கே இருக்கும் பொழுது ஏராளமான பிள்ளைகள் ஒன்றுக்குப் பத்தாகச் செலவு செய்து கொண்டு வெளியூர்களில் போய்ப் படிப்பதன் காரணமென்ன என்பது உணரப்பட வேண்டும். இங்குள்ள ஹைஸ்கூல்களின் தலைமை ஆசிரியர்களும் நிர்வாகிகளும் ஒன்று சேர்ந்து யோசிக்க வேண்டும். பணச்செலவு செய்வது மட்டும் நம்முடைய நோக்கமல்ல. செலவு செய்கிற பணத்திற்குப் பலன் ஒன்று பத்தாகக் கிடைக்கவேண்டும். அதற்கு நல்ல ஆஸ்டல் அமைப்பு ஒரு முக்கிய காரணமாக விருக்கிறது.

---

### திரு. பிரகாசம் ராஜிநாமா கொடுத்திருக்கிறார்

மார்ச்சு 11-உ காலை காங்கிரஸ் அக்கிராஸனர் திரு. ஜே. பி. கிருபளானி பத்திரிக்கை பிரதிநிதிகளுக்கு அளித்த பேட்டியில் பின்வருமாறு கூறினார்:—

திரு பிரகாசமும், சென்னை மந்திரி சபையில் எஞ்சியிருக்கும் மந்திரிகளும் தங்களது ராஜிநாமா கடிதங்களை என்னிடம் சமர்ப்பித்து விட்டனர். காங்கிரஸ் மேலிடத்தின் யோசனைப்படி மந்திரி சபையை மாற்றி அமைக்க பிரகாசம் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தைக் கூட்டப் போகிறீர்களா என்று கேட்டதற்கு அது பற்றித் தாம் எதுவும் கூற முடியாது. அது கட்சித் தலைவர் கையில் இருக்கிறது என்றார்.

ஆசாரியா கிருபளானி மேலும் கூறியதாவது:—பகைகள் ஒன்றுபட வேண்டுமென்பதே என் புத்திமதிக் கட்சிகளெல்லாம் ஒன்று பட்டுச் சேர்ந்து வேலை செய்தால் எனக்குப் பரம திருப்தியாக இருக்கும். ஆனால் கட்சிகளிடை உடன்பாடு ஏற்படுவதென்பது அவைகளைப் பொறுத்த சமாசாரம். அதற்காக அவைகளே பாடுபட வேண்டும். நான் யோசனை கூறுவது என்பது முடியாது. கட்சிகள் ஒன்றுபட வேண்டும் என்று நான் விரும்புவதை நான் தெரிவித்து விட்டேன்.

---

### மந்திரி ஸ்தானங்களைக் கூறுபோடல்

சென்னைச் சட்ட சபை அங்கத்தவர் ஒருவர் ராஜகோபாலாச்சாரியார் சென்னை மந்திரி சபையைத் திருத்தி அமைப்பதில் இப்படியான முடிவைக் கையாளலாமென்று தெரிவித்தாராம். திரு. பிரகாசம்காரு தலைமையில் 15 மந்திரிகள். அதில் பிரகாசம் கோஷ்டி 3, பிரகாசத்தை எதிர்க்கும் ஆந்திரர்கோஷ்டி 3, காமராஜ் கோஷ்டி 4, ராஜாஜி கோஷ்டி 3, கோஸ பிரதிநிதி 1, கன்னடம் 1.

---

### நன்கொடை

புது டில்லியில் ராஜாஜி அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்ட 'கலாமந்திரம்' என்னும் ஸ்தாபனத்துக்குக் காரைக்குடி தேசபக்தர் திரு. சா. கணேசன் அவர்களும் இன்னும் சில தனவைசியப் பிரமுகர்களும் விஜயம் செய்தார்கள் என்றும் மேற்படி ஸ்தாபனத்தின் வளர்ச்சிக்காக ரூ1001 நன்கொடை யளித்துள்ளார்கள் என்றும் ஒரு செய்தி 'கல்கி'யில் வெளியாகியுள்ளது.

---

### காரைக்குடி ஓட்டல் தொழிலாளர் சங்கம்

காரைக்குடி மார்ச் 10உ 9-3-47 மாலை 4-30 மணிக்கு இந்நகர் ஹோட்டல் தொழிலாளர் சங்கத்தின் மூன்றுவதாண்டு நிறைவுவிழா சென்னை, திரு. டி. செங்கல்வராயன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சங்கத் தலைவர் ஜி. பகவதீஸ்வரன் அவர்கள் தலைவரையும், பொதுமக்களையும் வரவேற்று தலைவர்களுக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார். காரியதரிசி வெங்கிட்டராமன் அவர்கள் ஆண்டு அறிக்கையை வாசித்தார். தலைவர் முன்னுரையில் சுருக்கமாகத் தொழிலாளர்கள் நிலைபற்றிப் பேசினார். தேவகோட்டை திரு. டி. ஆர். அருணசலம் அவர்கள் நேதாஜிபோஸ் படத்தைத் திறந்துவைத்து போஸ் வெளிநாட்டில் செய்த காரியங்களினால்தான் இன்று வெள்ளையர்கள் வெளியேறத் தாங்களாகவே தேதிகள் குறிப்பிட்டார்கள் என்றும், வருங்காலத்தில் இந்திய மக்கள் அனைவரும் பொறுப்புணர்ச்சியும் கடமையுணர்சியும் கொள்ளவேண்டு மென்றும் பேசினார். பிறகு சென்னை மாகாண ஹோட்டல்தொழிலாளர் மத்திய சங்கத்தின் தலைவர் திரு F. G. நடேச ஐயர் அவர்கள் பேசினார். பின்னர் சென்னை மாகாண ஹோட்டல் தொழிலாளர் மத்திய சங்கத்தின் காரியதரிசி என். கண்ணன் அவர்கள் தொழிலாளர்களுக்கு 8 மணி நேர வேலை வேண்டியதன் அவசியம் குறித்தும், தேவைக்குத் தகுந்த சம்பளம் வேண்டுமென்றும் தொழிலாளர்கள் ஒற்றுமைப்பட வேண்டியதின் அவசியம் குறித்தும் நீண்ட நேரம் சொற்பொழிவு ஆற்றினார். வி. எஸ். எஸ். மணி அவர்களும், நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்களும் பேசினார்கள். தலைவர் முடிவுரையில் தொழிலாளர்கள் சுதந்திரப் போராட்டத்தில் பங்குகொள்ள வேண்டுமென்றும், பரிபூரண விடுதலை வந்தாலொழிய தொழிலாளர் முன்னேற முடியாதென்றும், தொழிலாளர்களுக்கு வேண்டிய உரிமைகள், பாதுகாப்பு நிதிகள் முதலியன வழங்கப் பெற வேண்டுமென்றும் சங்கத்தைப் பலப்படுத்தி சமூக சேவை செய்து ஒற்றுமையுடன் ஜாதி வித்தியாசத்தை ஒழித்து ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்று பேசி விட்டு சென்னைக்குப் பயணமானார். பின்னர் கூட்டத்திற்கு எப். ஜி. நடேசய்யர் தலைமை வகித்தார். கண்ணனடிகள் 'கலையும் தொழிலும்' என்னும் பொருள் பற்றிப் பேசிய பின்னர் காரியதரிசி வாழ்த்துச் செய்திகளையும், வரவு செலவு கணக்கையும் படித்தார். நன்றி கூறலுடன் விழா இரவு 8-30-க்கு முடிந்தது.

---

# புலவர் போட்டி
## அடுத்தவாரம்

---

### காரைக்குடியில் வள்ளுவர் திருநாள்

8-3-47 மாலை 5க்குக் கதிரேசன் கழகத்தில் புலவர் உயர்திரு அன்புக் கருணையானந்தா அவர்கள் தலைமையில் வள்ளுவர் திருநாள் கொண்டாடப் பெற்றது. அவ்வமயம் திரு. ப. மாசிலாமணித் தேசிகரவர்கள் வள்ளுவர் படத்தைத் திறந்துவைத்து வள்ளுவரைப்பற்றி ஒரு ஆராய்ச்சி உரை நிகழ்த்தினர்கள். திரு. வே. சொக்கலிங்கம் பிள்ளையவர்கள் கல்வி என்பது குறித்தும், திரு. அண. அண்ணாமலை அவர்கள் அறம் என்பது பற்றியும், திரு. அ. செள. சுப்பிரமணிய பாரதியார் அவர்கள் "திருவள்ளுவர் காலம்" என்பது பற்றியும் திரு. R. ஞானவேல் அவர்கள் வள்ளுவரும் காந்தியும் என்பதுபற்றியும் திரு. ராம. சோமசுந்தரம் அவர்கள் 'வள்ளுவர் வாழ்த்து' என்பது குறித்தும், விருதுநகர்த் தமிழாசிரியர் திரு. கண்ணன் அடிகள் அவர்கள் 'வள்ளுவரும் வாசகரும்' என்பது குறித்தும் பேசினார்கள். கூட்டம் இரவு 10 மணிக்கு இனிது நிறைவேறியது.

---

### 11, 12-ம் ஆண்டுகளின் நிறைவு விழா

8—3—47 மாலை மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியின் மாணவர் நன்னெறிக் கழகத்தின் 11, 12-ம் ஆண்டுகளின் நிறைவு விழா அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் வித்துவான் திரு. பூவராகம் பிள்ளை அவர்களின் தலைமையில் கொண்டாடப்பட்டது. அர்ச்சூசப்பையர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு மாஸ்கரேனஸ் எம். ஏ. அவர்கள் 'வள்ளுவரின் எழுத்தாண்மை' என்பது பற்றியும் கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரி கலைச் செல்வி திருமதி மெ. சரசுவதி அவர்கள் இசைப் பயிற்சி என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

---

### பொன்னமராவதி

தமிழ்நாடு மாணவர் காங்கிரஸின் மூன்றாவது கூட்டம் புதுப்பட்டி கிராமக் காங்கிரஸ் காரியதரிசி வே. சிதம்பரம் அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. அவ்வமயம் குடந்தை ஜனாப் ஹக்கீம் சகோதரர்களின் இளையவரான ஜனாப் அப்துல் அஜீம் அவர்கள் சொற்பொழிவாற்றினர்.

### தொல்காப்பியர் தமிழ்க் கழகம்

பொன்னமராவதி தொல்காப்பியர் கழகத்தின் முதலாண்டு விழா, 7-3-47 [illegible] கல்லூரி, தமிழ் விரிவுரையாளர் பண்டித வித்வான், திரு. தி. இராமாநுஜன் அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. திரு. வித்வான் மா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் தலைவரவர்களை வரவேற்றுப் பேசினார். தலைவர் முன்னுரையில், தொல்காப்பியர் தமிழ்க் கழகத்தின் பெயர்க் காரணத்தையும், புலவர்களின் சிறப்பையும் குறித்துப் பேசினார். கா. சிவலிங்கம் 'தமிழ் மொழியின் மேன்மை' என்பது குறித்தும், கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரித் தமிழாசிரியர் வித்துவான் திரு. பொன். முத்துக்குமாரன் அவர்கள் 'பக்திச் சுவை' என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர். தலைவர் முடிவுரைக்குப்பின் கழக அமைச்சர் பா. திருநாவுக்கரசு நன்றிகூறினர். வாழ்த்துடனே கூட்டம் இனிதுமுடிவுற்றது.



## மலாயாச் செய்திகள்

### மலாயாவுக்குக் கப்பல்

நாகப்பட்டினம் துறைமுகத்திலிருந்து மார்ச் 15உ "ரஜூலா" கப்பல் புறப்படுகிறதென்று செய்தி கிடைத்திருக்கிறது. மார்ச் 30-உயும் கப்பல் புறப்படும். இப்படியே முறையாக மாதம் இருமுறை நாகையிலிருந்து மலாயாவுக்குக் கப்பல் புறப்பட ஏற்பாடாகி விட்டதென்று தெரிகிறது.

### மலாயா சர்வகலாசாலை

மலாயாவிற்கு ஒரு சர்வகலாசாலை உண்டாக்கப்படுமென காலனி மந்திரி கிரீச் ஜோன்ஸ் காமன்ஸ் சபையில் அறிவித்தார். இந்த சர்வகலாசாலையில் ஏழாம் எட்வர்ட் மெடிக்கல் காலேஜ், ராபின்ஸ் காலேஜ் இரண்டும் இணைக்கப்படு மென்றும், இவ் விஷயத்திற்காக ஒரு கமிஷன் நியமிக்கப்படும் என்றும் அதற்கு தலைமை தாங்கி சேவை செய்ய லண்டன் பொருளாதார சாஸ்திர பள்ளிக்கூட டைரக்டரான ஸர் ஸாண்டர்ஸ் இசைந்திருக்கிறார் என்றும் தெரிவித்தார்.

### மலாயா உள்நாட்டு விமானப் போக்கு வரத்து

மலாயா தீபகற்பத்தின் உள்நாட்டு விமானப் போக்குவரத்திற்காக மலாயன் ஏர்வேஸ் லிமிடெட்டால் தயாரிக்கப்பட்ட திட்டங்களை சிங்கப்பூர், மலாயா யூனியன் அரசாங்கங்கள் இப்போது அங்கீகரித்துள்ளன. ஏப்ரல் 1-ந் தேதி முதல் அன்றாட வெளியூர் போக்குவரத்தை ஆரம்பித்து வைத்து, வருகிற வருடத்திற்குள் மலாயா முழுதும் 12 முதல் 20 பிரயாணிகளை ஏற்றிச்செல்லக்கூடிய விமானங்களைக்கொண்டு அன்றாடம் இருமுறை போக்குவரத்து நடத்த இந்தக் கம்பெனி திட்டமிட்டிருக்கிறது.

### தொழில், பெயர் பதிவு புதிதாக ஆரம்பம்

சிங்கப்பூரில் 1940-ம் வருடம் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் கீழ்ப்பதிவு செய்யப்பட்ட சகல முன்னைய தொழில் பெயர்ப் பதிவுகளும் (பிஸினஸ் நேம்ஸ்-வர்த்தகம் முதலியவை) ரத்து செய்யப்படுகின்றன. மீண்டும் புதிய பதிவு வேலை தொடங்கும்.

சிங்கப்பூர் ஆலோசனை சபையில் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களும் பிரஸ்தாப நடவடிக்கையை சட்ட பூர்வமானதாக்கும் மசோதாவும் ஒன்று. இந்த மசோதாவின் பெயர் "தொழில் பெயர் (புதிய பதிவு) மசோதா" என்பதாகும்.

ஜப்பானிய ஆதிக்கக் காலத்தில் தொழில் பெயர் பதிவு சம்பந்தமான ரிகார்டுகளெல்லாம் பழுதுபட்டும், சிறைந்தும் போய்விட்டபடியால் புதிய பதிவு நடவடிக்கையை ஆரம்பிக்க வேண்டியது அவசியமாயிற்றென்று கூறப்படுகிறது.

### நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம் சிங்கப்பூர்

மாலை 4 மணிக்கு 12வது ஆண்டு நிறைவு விழாவும் மஹாசபையும் ஸ்ரீ தெண்டாயுதபாணி கோவில் கொலு மண்டபத்தில் கூடியது. அவ்வமயம் 41 அங்கத்தினர்களும் ஏராளமான பிரமுகர்களும் விஜயம் செய்திருந்தனர். மஹாசபைக்கு திரு. மெய. மெ. மலையாண்டி செட்டியார் அவர்கள் தலைமை வகித்துக் கீழ்க் கண்டவாறு பேசினார்கள்:—

இன்று 12வது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடுவதற்காக இங்கு கூடியுள்ளோம். கடந்த வருடத்தில் நம்மவர்களை அதிகமாய் பாதிக்கக் கூடிய மணி லெண்டர்ஸ் சட்ட 4வது பிரிவை ஸ்ரீ தெண்டாயுதபாணி கிருபையால் திருத்தியுள்ளோம். மற்றும் நம் தாய்நாடு சென்றவர்களுக்குப் பிரயாணச்சீட்டு வாங்கிக் கொடுப்பதிலும் மற்ற நமது சங்கம் தளரா ஊக்கத்துடன் வேலை செய்திருக்கிற தென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். புது வருடத்தில் பல மாறுதல்கள் ஏற்பட இருப்பதால் டிை நிர்வாக சபையார் இடைவிடா முயற்சியுடன் ஆவன செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

பின்னர் காரியதரிசி அவர்களால் கணக்கு வாசிக்கப் பெற்றது.

இம்மஹாசபையின் தீர்மானப்படி பதிமூன்றாவது வருஷத்துக்கு கீழ்க் கண்டவர்களை நிர்வாக சபை உத்தியோகஸ்தர்களாகவும் அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

திருவாளர்கள்:-க. வெ. அ. காசி விஸ்வநாதன் செட்டியார் — தலைவர், முத்து. கரு. அரு. சுரு. அரு. சொக்கலிங்கம் செட்டியார் — உபதலைவர், பெரி. கா. நா. ஏகப்ப செட்டியார்— காரியதரிசி, மு. சிவ. மெ. லெ. கணேசன் செட்டியார் — உபகாரியதரிசி, அரு. சா. அரு. மெய்யப்ப செட்டியார் பொக்கிஷதார், செ. ராம. செல்லப்ப செட்டியார்-கணக்கு பரிசோதகர்.

## கஞ்சி வரதர் கோயில்

காஞ்சிவரத்திலுள்ள புகழ்பெற்ற வைணவ ஆலயமான வரதராஜப் பெருமாள் கோயில் தாழ்த்தப்பட்டோருக்கு மார்ச்சு 8-உ திறந்து விடப்பட்டது. ஆலயத்தினுள் முதன் முதலாகத் தாழ்த்தப்பட்ட மக்களை அழைத்துக்கொண்டு சென்னை சட்ட சபைத் தலைவர் சிவசண்முகம் பிள்ளை, முனிசாமி பிள்ளை முதலியோர் நுழைந்தனர்.

### ஜமீன்தாரால் மூன்று கோவில்கள் திறந்துவிடப்பட்டன

9-2-47 அன்று சிவகெங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்ததில் மிகக் குறிப்பாகவுள்ளதும் புராதனமானதும் பாடல் பெற்றதுமான 'காளையார் கோவில்' திருக்கோஷ்டியூர், மானமதுரை ஆகிய மூன்று ஸ்தலங்களின தேவாலயங்களை சிவகெங்கை மஹாராஜா, இளைய மஹா ராஜா, திவான் வைத்திலிங்கய்யர், மூவரும் சென்னை சட்டசபைத்தலைவர் திரு சிவஷண்முகம் பிள்ளை, மாஜி. மந்திரி திரு முனிசாமி பிள்ளை, அரசியல் நிர்ணயசபை அங்கத்தினர் திரு கக்கன், மற்றும் பல தேசபக்தர்களுடன் சென்று ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட்டு இறைவழிபாடு செய்துவைத்தார்கள். ஒவ்வொரு ஸ்தலத்திலும் ஏராளமான ஹரிஜனங்களும் கிராம மக்களும் திரளாகக் கூடி வைவபத்தைச் சிறப்பித்தனர். ஒவ்வொரு கோவிலிலும் உள்ள குருக்கள்களுக்கும்,பட்டர்மார்களுக்கும் என்றும் ஹரிஜனங்களை ஆலயத்தில் அன்போடு வரவேற்று சுவாமி தரிசனம் செய்துவைக்க வேண்டுமென மகாராஜா அவர்கள் போதித்தது குறிப்பிடத்தக்கது.

### வாலாஜாபாத் இந்துமத பாடசாலை

செங்கற்பட்டு அரசிபலர் ஆசிரியர் பயிற்சிப் பாடசாலையில் மேல் வகுப்பில் பயிலும் (ஸீனியர் செக்ஷன்) மாணவர்கள் 30 பேர் மூன்று ஆசிரியர்களுடன் 28-2-47உ இங்குவந்து சென்றனர். பாடசாலையின் நடைமுறைகள் அனைத்தையும் கண்டு தென்னிந்தியாவில் 420 சிறுவர்கள் கொண்ட பெரிய இந்து மாணவர் இல்லம் இது ஒன்றே என்று பாராட்டினர்.

## மகளிர் இல்லத்தில் ஆண்டுவிழா

முதல் பக்கத் தொடர்ச்சி

வழிப் போக்கில் திருக்குறட் பயிற்சி பெரிதும் போற்றி வரவேற்றற்குரியதாகும். கல்வி அமைச்சரும், கல்வித் தலைவர்களும் குறளைப் பயில வேண்டுமெனக் கூறுவதால் மட்டும் குறள் பரவிவிட மாட்டாது. கல்லூரித் தலைவர்களும், குறிப்பாக மொழி ஆசிரியர்களும் குறளிடத்துப் பற்றுக் கொண்டு அதனைக் கற்பிக்கத் தொடங்கினலன்றி குறள் குவலய மெங்கும் பரவாது. இம் முறையில் சிறுவர்களது உள்ளத்திலேயே குறள் உணர்ச்சியை உண்டாக்கி விட்டால் பின்னர் அவ்வுணர்ச்சி அழியாதென்ற பேருண்மையை அறிந்த நமது நண்பர் முருகப்பா அவர்கள் இள மாணவர்கள் விரும்பிக் கற்கின்ற முறையில் குறளைக் கையாண்டு அவர்களைப் படிக்கும்படி செய்யும் முயற்சி மொழித் தொண்டில் ஈடுபட்டுள்ள எம் போன்றார்க்கு எல்லையில் உவகை அளிக்கின்றது. இது போன்று எல்லாப் பள்ளிகளும் குறளைப் பரப்புதலே தம் தலையாய கடனென்று கருதி உழைத்தால் நாடும் மொழியும் நலம் பெறும் என்பது உறுதி. இவ்வுண்மையை உணர்ந்த பின்னராவது நம் தமிழ் நாட்டு அரசியல் தலைவர்கள் பகவத் கீதையை மட்டும் படிப்பதோடு அமையாது அதனினும் எல்லா வகையிலும் சிறந்து விளங்கும் குறளினைக் கசடறக் கற்று அதன்படி வாழ ஆண்டாலும், அறிவாலும் உலகப் பழக்கத்தாலும் மிகுந்து தங்களைத் தாமே உயர்ந்தோர் என்று கருதிக் கொண்டிருக்கும் மக்களுக்கு வழி காட்ட முன் வந்த இம் மகளிர் இல்லத்தாராகிய மழலை மொழிக் குழவியர் தம் ஆண்மைக்கும் அறிவின் நிறைவுக்கும் உணர்ச்சிக்கும் கைம்மாறு கருதப் பெரியோர்களாகிய நாம் கடிந்து மொழியாது எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப் பொருளின் மெய்ப் பொருளைக் காணும் நுண் மாண் நுழை புலமைக்கேற்ப அவர்கள் வழிச் சென்று நன்னிலை எய்துவோமாக.

கட்டத் துணியின்றிக் கால் வயிற்றுக் கஞ்சியின்றிக் காலனுடன் போராடும் காலம் ஒழிய வேண்டுமானல், அந்நியரின் ஆட்சியால் அவலமுறும் அன்னையின் அருந்துயர் அகல வேண்டுமானல், நாடும் மொழியும் நலம் பெற்று எத்திசையும் புகழ் மணக்க ஏற்றமுற வேண்டுமானல், பாலூட்டும் பருவத்திலே, பண்பூட்டும் இத்தகைய பள்ளிகள் பல்லாயிரக் கணக்கில் தேவை.

இம் மகளிர் இல்லத்தின் பெருவளர்ச்சிக்கு ஊன்றுகோல் போல்வார் தோழர் முருகப்பா அவர்களும் அவர்கள் மனைவியாருமே என்பதனை அனைவரும் நன்கு அறிவர். முருகப்பா அவர்களின் வாழ்க்கை முழுதும் ஒரு திறந்த நூல். மறைவு என்பதே இல்லை. அவர்களுடன் பன்முறை உரையாடல்கள் மூலம் அவர்கள் வாழ்க்கையின் பல பகுதிகளை நன்கு அறிவோம். அவற்றை அறிந்த பின்றை எம் மனத்தில் எழுந்தவை இவைதான்:—

புரட்சிக்கும் அமைதியின்மைக்கும் அடிப்படையான அரசியற் கொந்தளிப்பை நீத்து அமைதியாகப் பலர் அறியா வண்ணம், நாட்டுக்கும் மொழிக்கும் நலம் பயக்கும் இத் தொண்டினை மேற்கொண்டமையே எம் போன்ற இவ்வுணர்ச்சி மிக்கவர்களை அவர்கள்பால் தொடர்பு படுத்தியது.

நாட்டிற்காக இறப்பதைக் காட்டிலும் இருத்தலே (வாழ்தலே) சாலச் சிறந்தது. அவ்விதம் செம்மையுடன் வாழச் செம்மையான கல்வி தொடக்கத்திலிருந்து கற்பிக்கப்பட்டு வருதல் வேண்டும். எவரொருவர் இப் பெரும் முயற்சியில் பெரிதும் ஈடுபட்டு, அதனால் வரும் இன்னல்களை இன்முகத்துடன் ஏற்று உண்மைப் பணி புரிகின்றனரோ அவரே உண்மையில் தொண்டியற்றுவோராவர். அந்நிலையில் புகழ் அதிகம் தாராத இச் சீரிய முயற்சியைத் தோழர் மேற்கொண்டிருப்பது உய்த்துணர்ந்து பெரிதும் உவக்கத் தக்கது மட்டுமன்று, பின்பற்றுதற்கும் உரியது என்பதை நாம் மறந்துவிடலாகாது. இது போன்ற பள்ளிகள் மூலம் எதிர்கால மக்களுக்கு இப்போதிருந்தே செம்மையான கல்வி கற்பிக்கத் தலைப்படுதல் வேண்டும். இத்தகைய நிலையங்களுக்குத் தக்க ஆதரவும் துணையும் புரிய வேண்டுவது நமது கடமை என்பதை நன்குணர்தல் வேண்டும்.

இதுபோன்ற தொரு பெரிய சீரிய முயற்சியில் நம் பகுதியில் தலைப்பட்டுள்ளவர்கள் இருவர். ஒருவர் முருகப்பா அவர்கள். மற்றொருவர் கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரித் தலைவர் மெய்யப்ப செட்டியார் அவர்கள். இருவர் முயற்சியும் ஒன்றுக்கொன்று உறுதுணை புரிவன. முதற்படி மகளிர் இல்லம். இரண்டாவது படி கலைமகள் கல்லூரி. இரண்டும் பெண்மக்களின் முன்னேற்றத்துக்குப் பெரும் துணை புரிந்துவருதலின் இவ்விரண்டிற்கும் தக்க ஆதரவு தருமாறு செந்தமிழ் நாட்டுச் செல்வப் பெருமக்களை முழுமனத்துடன் வேண்டிக் கொள்கிறேன். இவ்விரு நிலையங்களும் தேய்வின்றி என்றும் அறியா வளர்மதிபோல் வளர்ந்து மிக்க நலம்புரிய என்றுமுள தென் தமிழாம் இமயத்தின் எல்லைகண்ட எந்தமிழ்த் தாயின் அடிகளை வணங்குவாம்.

---

### இராமநாதபுரத்தில் சிமிண்ட் தொழிற்சாலை

மார்ச் 8உ நடந்த மேல்சபைக் கூட்டத்தில் பொதுஜன பாதுகாப்பு மசோதா நிறைவேற்றப்பட்டது. கைத்தொழில் மந்திரி வி. வி. கிரி ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் சொன்னதாவது:- சீக்கிரம் இரு சிமிண்ட் தொழிற்சாலைகளை இம் மாகாணத்தில் தனிப்பட்டவர்கள் ஆரம்பிக்க இந்திய சர்க்கார் அனுமதி யளித்திருக்கிறது. ஒரு தொழிற்சாலை கர்நூல் ஜில்லாவிலும், மற்றொன்று ராமநாதபுரம் அல்லது திருநெல்வேலி ஜில்லாவிலும் அமைக்கப்படும்.

---

### தங்கம் வெள்ளி இறக்குமதிக்குத் தடை

வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்கு தங்கம் வெள்ளி இறக்குமதி யாவதை தடை செய்வதாக சர்க்கார் வட்டாரங்களிலிருந்து அதிகாரபூர்வமான தகவல் இல்லாவிட்டாலும், இறக்குமதி லைசென்ஸுகளை இந்திய சர்க்கார் இப்பொழுது தருவதில்லையென்று பம்பாயில் உள்ள அங்கீகரிக்கப்பட்ட அதிகாரிகள் கூறுகின்றனர். பெல்ஜியம், ஹாலந்து, மற்றும் பல ஐரோப்பிய தேசத்தினர், நியூயார்க்கில் வெள்ளியை வாங்கி அதை இந்தியாவுக்கு விற்று ஏராளமாக லாபமடித்து வருவதாக ஒரு பத்திரிகையாளர் வெளியிட்டதன் எதிரொலியே இந்திய சர்க்காரின் இந்நடவடிக்கை என்று கூறப்படுகிறது.

# புறப்படுங்கள் போருக்கு!

(அரவரசன்)

★

### "தொடாதே தூரப்போ"

மிகவும் கடுமையான சொற்கள் தான். ஆனால் எங்கும் எளிதாக உபயோகப்படுத்தப்படுகின்றன. அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசிக்கும் எம்பெருமான் கோயில் கொண்டுள்ள இடங்களிலும், குளத்துப் படிகளிலும் இச்சொற்களை நாம் அடிக்கடி கேட்கின்றோம். கடும்பசி காரணமாகக் கதிகலங்கிய ஒருவனை, அவன் சாப்பிடப்போகும் வேளையில் 'சாப்பிடாதே, வெளியில் போ,' என்றால், அவன் உள்ளத்திலே ஏற்படும் வேதனை இருக்கின்றதே, அதைவிட அதிகமாகத் தாக்கும் தன்மை, 'தொடாதே தூரப்போ' என்பதற்கு உண்டு. இச்சொற்களைக் கேட்குந்தோறும் நெஞ்சம் தடிக்கின்றது. ஆனால் நெடுங்காலமாக நியாயமெனக் கருதப்பட்டு வந்திருக்கிறது. பன்னெடுங்காலமாக அவதிக் குட்பட்டபிறகு 'வேதியராயினும் ஒன்று—மற்று வேறுகுலத்தினராயினும் ஒன்று' என்பதைப் பாரதி வாயிலாகக் கேட்டு மகிழ்வுற்ற பிறகு—மக்களின் மதிப்பிற்குரிய தலைவர்கள் பலர் 'இனி இந்நாட்டில் சாதிமதபேதங்கள் நிலைத்திருக்க விடமாட்டோம்' என்று முழக்கமிட்டதைக் கேட்டபிறகு, தீண்டாதவன் ஓடி வருகிறான், கூடிக்குலாவலாம் என்ற ஆவல் மிகுதியினால். ஆனால் சமூகம் அது அத்துமீறிய செய்கை என்று கூறி, அவர்களை நோக்கிச் சிரிக்கிறது.

ஒற்றுமையுடன் சேர்ந்து வாழ விரும்பும் அவனைத் 'தொடாதே, தூரப்போ' என்றால் அவன் என்ன நினைப்பான்? "வெள்ளையர் ஆண்டாலென்ன! மற்று அவனை விரட்டுவோர் ஆண்டாலென்ன! ஆண்டையும் அடிமையும் இருப்பது போலவே, இந்நாட்டில் மேல்சாதி, கீழ்சாதி என்ற பாகுபாடும் இருக்கத்தான் செய்கின்றது" என அவனுடைய வேதனையடைந்த உள்ளம் வெளியே சொல்வதற்கும் வெட்கமடைந்த நிலையிலே எண்ணச் செய்கிறது.

இப்பொழுது நம் நாட்டிலே நடப்பது ஆங்கில ஏகாதிபத்யத்தின் அட்வைஸரி ஆட்சி அல்ல. மக்களை வளமுடன் வாழவைக்கவேண்டும் என்ற ஒரே நோக்கமும், உறுதியும், கட்டுப்பாடும் மிகுந்த ஒப்பற்ற தலைவர்களின் ஆட்சி, நம் நாடுசெய்த தவப்பயன் என்று புகழ்ந்து பூரிக்கும் அளவிற்கு அறிவும் ஆற்றலும் மிகுந்த அறிஞர்கள் ஆட்சிபுரியும் காலம். அதிலும் ஆங்கிலேயர் "இதோ நாங்கள் போகிறோம்" என்றலறிக்கொண்டே மூட்டை கட்டும் நேரம். இப்படிப்பட்ட சுதந்திர நாட்டிலே மனிதனை மனிதன் தீண்டக்கூடாது. இது இன்னும் அனுமதிக்கப்பட்டுவருகிறது என்று கூறினால் ஆச்சரியம் மட்டுமல்ல வெட்கமும் ஏற்படுகிறது.

தீண்டப்படாதோர் என்று சொல்லப்படுவோரெல்லாம் வழிப்பறியாளி கையில் வசிப்பவர்களல்ல. அப்பாவி கையை அழகுற அடைத்துக் கொடுப்பவர்கள். திருட்டு வியாபாரத்தில் கொள்ளையடிக்கும் தியரல்ல. குருட்டு நம்பிக்கையினால் கைப்பொருளையும் இழப்பவர்கள். மாலை நேரத்தில் மலர்க்கொடி மல்லிகாவின் காதைப் பிடித்துக்கொண்டு உல்லாசமுடன் சோலையிலே காற்றுவாங்கும் சீமான்கள் அல்ல, மல்லிகாவின் கூந்தலை அழகுபடுத்தும் பூக்கள் உண்டாவதற்குக் காரணமாயிருப்பவர்கள். பிறர் உழைப்பை உறிஞ்சுபவரல்ல. பிறருக்காகவே உழைப்பவர்கள். இவர்களைத் தொட்டால் தீட்டு என்கிறது இந்தப் பாழும் சமூகம்!

'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்' எனும் எண்ணமுடையோராய் நின்று வாழ்ந்த தமிழர்களிடையே இத்தகைய வேற்றுமைக் கருத்துக்களை சில சுயநலக்காரர்கள், தங்களுடைய சொந்த நலன் கருதிப் பரப்பினர். இதுவே நாளடைவில் மக்கள் மனத்திலே தீண்டாமை விருக்ஷமாக வேரூன்றிற்று. சாதி வேற்றுமை காரணமாக நாட்டிலே எத்தனையோ சண்டைகள் நிகழ்கின்றன. பிற நாட்டார் நம்மைப்பார்த்து நகைக்கும் அளவிற்குத் தீண்டாமை வளர்ந்து விட்டது.

தென்னாப்பிரிக்காவிலேயே வெள்ளை நிறத் திமிர் பிடித்த ஸ்மட்ஸின் அக்கிரமச் செயல்களைக் கேட்டுக் கொதிப்படைவது மட்டுமல்ல—கண்டிக்கவும் முன்வருகிறோம். பிறநாட்டு நடவடிக்கைகளைக் கவனிக்கும் அளவு கூட நாம் நம் நாட்டுக் குறைபாடுகளைக் களைய முன்வருவதில்லை. காரணம், நாம் தெரிந்தும் தெரியாதவர்களாக்கப்பட்டோம். அதற்கு உதவியாக நம் குருமார்களும், புராணிகர்களும்—ஏன்!—பிறை சூடிய பித்தர் முதல் மறைபொருளாரும் மறையோர்வரை இருந்திருக்கின்றனர். ஆகவே தீண்டாமை இந்நாட்டில் வேரூன்றிவிட்டது.

தீண்டாமையின் வேர் அறுக்கப்பட வேண்டுமானால்—அதன் அடிப்படையாக அமைந்திருக்கும் விஷவிருக்ஷம் வெட்டப்பட வேண்டுமானால் அறிவை வளர்க்கக்கூடிய கருத்துக்கள் ஒவ்வொரு உள்ளத்திலின்றும் ஊற்றெடுத்து, நாட்டின்கண் அருவியாகப் பாயவேண்டும். சீர்திருத்தக் கருத்துக்கள் நாட்டிலே நர்த்தனமாட வேண்டும். இது சுலபமாகச் செய்யக் கூடியது என்றோ, இதற்கு யாதொரு விதமான எதிர்ப்புக்களும் இருக்கமுடியாது என்றோ நான் கூறவில்லை. எதிர்ப்பு ஏராளமாக ஏற்படலாம். அதை எதிர்த்துப் போராடி வெற்றிகொள்வதே அறிவுடைமை. உதாரணமாக மார்ட்டின் லூதர் மேல் நாட்டிலே சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்பிய காலத்து, ஒரு சிலரே அவைகளை ஏற்றுக்கொண்டு அவரைப் பின்பற்றினர். ஏனையோர் ஏற்க மறுத்தது மட்டுமல்ல—எதிர்த்தும் தாக்கினர். காரணம்-அக்காலத்திய சூழ்நிலை. அந்நாடுகள் அவ்வளவுதூரம் அறிவு மழுங்கியனவாய் இருந்தன. சூழ்நிலை மாறியதும் அறிவுமுதிர்ச்சியடைந்தன.

அஃதேபோல் நம் நாட்டிலேயும் தீண்டாமையைக் காப்பாற்றிவரும் சூழ்நிலைகள் சில உள. வைதீகம், சம்பிரதாயம், பழைய வழக்கம் என்றெல்லாம் பல பெயர்களில் தீண்டாமை என்ற ஒரே குறிக்கோளைத் தெரிவிக்கும் தன்மையுடைய சூழ்நிலை, இந்நாட்டைத் தவிர வேறெங்குமே கிடையாது.

ஆகவே நாம் இப்பொழுது செய்ய வேண்டியவேலை, தீண்டாமை நிலைத்திருப்பதற்குக் காரணமாகவுள்ள சூழ்நிலைகளைச் சுட்டெறிப்பதே. அப்பணி புரிய இதுதான் சரியான தருணம். தீண்டாமை களையப்பட்டால்தான் ஊருக்கு வெளியே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் உழைக்கும் கூட்டத்தினர் சுதந்திரமடைந்ததாகக் கூற முடியும். இல்லையேல் நாடுசுதந்திரமடைந்துவிட்டது என்பதற்கு பொருள் கிடையாது. ஆகவே யாவரும் ஒற்றுமை மனப்பான்மையுடன் முரசு கொட்டுங்கள். தீண்டாமையை ஒழிக்கும் போரிலே தீவிரமாக உழைக்க முன் வாருங்கள். அதோ கேட்கிறது முரசின் ஒலி. புறப்படுங்கள்! வீழ்க கொடுமை! ஒழிக தீண்டாமை!

——

### காங்கிரஸ் என்ற வார்த்தை நீக்கப்பட்டது

அகில இந்தியக்காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியின் மாநாடு கான்பூரில் பிப் 21உ கூடியது. இனிமேல் இந்தியசோஷலிஸ்ட் கட்சி என்று அழைக்கப்படும் என்றும் காங்கிரஸில் இல்லாதவர்களும் அதில் அங்கத்தினர்களாகச் சேரலாம் என்றும் முடிவுசெய்துள்ளது.







உலக சமாதானம் என்று எல்லோராலும் பேசப்படுகிறது. ஆனால் எப்படி நடந்துகொண்டால் இது இயலும் என்பது மட்டும் சிந்தனைக்குரிய செய்தியாகும். பல திறப்பட்ட கருத்து வேற்றுமைகள் முதிர்ந்துள்ள தற்கால சூழ்நிலையிலே பொது நோக்கமுடையவரின் சொல் எப்படி அமைய வேண்டும்.?

இந்தக் கேள்வியை முதன் முதலில் யெழுப்பியவன் உலகிலேயே முதன் முதலில் தமிழன் யென்றால் அது வெறும் புகழ்ச்சியில்லை. சமயச் சண்டைகள் மலிந்திருக்கும் இந்நாட்டை அமைதிப் படுத்தக் கனவு கண்டார் திருவள்ளுவர். அவர் எச்சமயத்தைச் சார்ந்தவரோ அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் அவரது கருத்துகளை எச்சமயத்தினரும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாயிருக்கிறது. அதற்குக் காரணம் அவரது விரிந்த மனப்பான்மையும், சிறந்த பொது நோக்கமுமே யாகும். இந்த இரு காரணங்களாலேயே வள்ளுவர் புகழ் என்றும் பொன்றாது நின்று நிலவுகிறது யென்பது அறிஞர் கருத்தாகும்.

இலக்கியத்தின் மூலம் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பொது நிலையைத் தோற்றுவித்து புகழின் உச்சநிலையை வள்ளுவர் அடைந்தார்.

சென்ற நூற்றாண்டில், தமிழிசையிலே பொதுநிலையைத் தோற்றுவித்த புகழ் உலகில் முதலிடம் பெற்றவர் மாயூரம் முனிசிப் உயர்திரு ச. வேதநாயகம்பிள்ளை அவர்கள் யென்றால் மிகையாது.

வேதநாயகம் அவர்கள் கிறிஸ்தவ சமயத்தில் தோன்றியவர். ஆயினும் சமரச மனோபாவ மிக்கவர். தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் தேர்ச்சியுடையவர், திருச்சிராப்பள்ளிக்கு அடுத்துள்ள குளத்தூரில் பிறந்தார். கி. பி. 1848-ம் ஆண்டில் அரசாங்க பதவியடைந்து படிப்படியாக உத்தியோக உயர்வு பெற்று சீர்காழி, மாயவரம் முதலிய ஊர்களில் மாவட்ட (ஜில்லா) முனிசீப்பாக இருந்தார்.

இப்பெருந்தகையறிஞர் 'பிரதாப முதலியார் சரித்திரம்' முதலிய வசன நூல்களும், 'சர்வ சமய சமரசக் கீர்த்தனை' எனும் தமிழிசை நூலும், பல நீதி நூல்களும் இயற்றியுள்ளார்.

## வேதநாயகமும் தமிழிசையும்

(தி. மா. பரமசிவம்)

இப்பேராசிரியர் 1889-ம் ஆண்டில் இயற்கை எய்தினர். இவர் புலமையையும் பண்புகளையும், திருசிரபுரம் பெரும்புலவர் (மகாவித்வான்) மீனாட்சிசுந்தரம் போன்ற தமிழறிஞர்கள் சிறப்பு செய்துள்ளனர். இது தான் வேதநாயகம் அவர்களின் வரலாற்றில் நாமறிய வேண்டுவன வாகும்.

இன்றைய தமிழகத்திலே "ஸங்கீத உலக ஸத்குரு" என்றெல்லாம் வேதநாயகம் பிள்ளையை ஒருவரும் போற்றவில்லையே என்றெல்லாம் யாரும் கருதலாம். அதுதான் தமிழ் நாட்டின் தவறான ஒரு சாபக்கேடு. வங்காள சிங்கத்திற்கு ஜே என்று கத்திக் கதறுபவன் தமிழன். ஆனால் அவன் வாய் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் செயற்கரிய செயலைப் போற்றியறியாது.

இதைப் போலவே தியாகையரின் பெயரை அறிந்த அளவு தமிழ்ப் பெரும் புலவன் திரு வேதநாயகம் அவர்களை தமிழ் மக்களில் பெரும்பாலோர் அறியவில்லை. தமிழிசை வள்ளல்களான, தாயுமானவர், இராமலிங்கர், முத்துத்தாண்டவர், வேதநாயகம் போன்றவர்களின் நினைவு விழா தமிழகத்திலே எத்தனை நகரங்களிலே கொண்டாடப்படுகிறது?

இந்தக் கேள்விக்குத் தமிழ் மக்களாகிய நாம் தலைகுனியத்தான் வேண்டும். முத்துத்தாண்டவர் விழாவாவது சில இடங்களில் நிகழ்ந்து வருவதாக பத்திரிகை வாயிலாக அறிகிறேன். ஆனால் இதுவரையிலும் வேதநாயகம் விழா எங்குமே கொண்டாடுவதில்லை யென்றே தெரியவருகிறது.

தமிழுக்கு ஏதோ மறுமலர்ச்சி ஏற்பட்டு விட்டதாக இப்பொழுது பேசப்படுகிறது. கட்சியின் காரணமாக செல்வாக்குப் பெற்றிருந்த பாரதியாருக்கு, இவர் மறைந்த பிறகாவது காங்கிரஸின் ஆதரவால் நினைவு விழாக்கள் நடைபெறுகின்றன. உண்மையிலேயே பாரதியாரின் புலமையை அறிந்து போற்றுபவர்கள் வெகு சிலரே யாகும்.

இதேபோல் இன்றைய பாரதிதாசனின் புகழும். நான் விளக்கமாகக் கூறுவதென்ன வென்றால், பாரதியாரையும், பாரதிதாசனையும் இன்னும் தமிழ்ப் பெரு மக்கள் சரியாக அறிந்து போற்றவில்லை என்பதுதான். சரியான முறையில் போற்றி இருந்தார்களேயானால் வங்காளக் கவி தாகூரை நாம் புகழ்ந்து பேசுகிற அளவு வங்காளத்தில் பாரதியாரைப் புகழ்ந்திருப்பார்கள். பெர்னாட்ஷாவை நாம் போற்றுகிற அளவு பாரதிதாசனை இங்கிலாந்தில் போற்றியிருப்பார்கள். ஆனால் இன்றைய நிலை அப்படியில்லை.

வேதநாயகம் அவர்களின் சில பாடல்களைத்தான் நாம் அடிக்கடி இன்றைய தமிழிசை அரங்குகளில் கேட்க முடிகிறது. அதிலும் சொற்சிதைவின்றி, பாடுகின்ற இசைப்புலவர்கள் ஒரு சிலரே. ஆகவே கட்சி வேற்றுமைகளையும், சமய வேற்றுமைகளையும் ஒழித்து, நமது தமிழ் மொழிக்கு வளம் செய்த அறிஞர்களையும், பெரியார்களையும் முதலில் போற்ற தமிழ்ப் பெரு மக்கள் முற்பட வேண்டும்.

ராம நாமத்தையோ, சிவன் பெயரையோ கூறவில்லை யென்றோ, காங்கிரஸிலோ, மற்ற கட்சிகளிலோ இல்லை யென்றோ, தமிழ்ப் புலவர்களை தாழ்த்தி வைப்பது அறிவுடைமையல்ல.

சமரசபுலவர் வேதநாயகம் அவர்கள் சிறந்த கடவுளன்பர். முழுமுதற் றன்மையுடைய இறைவனை பொருள் பாடல்களால் வழிபடுகிறார். பாடல்கள் எளிமையும், சுவையும், பொருட்செறிவும் மிகுந்தவை. ஒரு சில இங்கு குறிப்பிடுகிறேன்.

நீதி நூல் (நெஞ்சொடு கிளத்தல் எனும் பகுதியில் ஒரு பாடல்).

கதிரவன் கிரணக் கையால் கடவுளைத்
தொழுவான் புட்கள்
சுதியொடும் ஆடிப்பாடித் துதிசெயும்
தருக்க ளெல்லாம்
போதியவர் தூவிப் போற்றும் பூதந்தந்
தொழில் செய் தேத்தும்
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும் அகமே நீ
வாழ்த்தா தென்னே!

இயற்கைச் சக்திகளெல்லாம் தங்களை யியற்றுவித்து, இயக்குகின்ற இறைவனைத் தத்தம் குறிப்புகளால் வாழ்த்துவதாக நயம்படக் கற்பனை செய்கிறார் இப்பாடலில். இவ்விதம் ஓரறிவுடைய தாவர இனங்களெல்லாம் இறைவனைப் போற்றுகின்றபோது, மனிதனே நீ யேன் வாழ்த்தவில்லை யென்று, தன்னைத்தானே கேட்பதுபோல் நயம்பட உணர்த்துகிறார்.

சர்வ சமய சமரசக் கீர்த்தனை

(பாடல் எண் 199. சரணப்பகுதியில் இரண்டாவது அடி.)

ஆகாத காலம் இதில் அசடர்
தலையெடுத்தார்
அருங்குண சீலர்கள் அதிகாரம்
கைவிடுத்தார்
போகாமற் கோளரும் பொய்யரும்
வந்தடுத்தார்
பூவிற்ற கடையிலே வில்விற்க
தொடுத்திட்டார்

என்று தற்கால நிலையை விளக்குகின்ற பல பாடல்களுமிருக்கின்றன, இன்னும் விரித்தால் கட்டுரை நீளுமென்றஞ்சி நிறுத்துகிறேன்.

இறுதியாக தமிழகத்தின் இசைப் புலவர்களை நான் வேண்டிக்கொள்ளும் ஒரு விண்ணப்பம்.

திரு. வேதநாயகம் அவர்களின் பாடல் முழுமையும் தமிழிசையிலே ஆர்வமிக்க இளம் பாடகர்கள் மனப்பாடம் செய்து, பாடுதல் வேண்டும். கூடிய விரைவிலே இசைத்தொழிலில் ஈடுபட்டுள்ள நீங்களாவது வேதநாயகம் அவர்கள் விழாவை தமிழ் நாட்டின் முக்கிய நகரங்களில் கொண்டாட முற்படுங்கள்.

இந்த இரண்டு விண்ணப்பங்களையும் யேற்குமாறு தமிழிசை வல்லாரை வரையும் (சங்கீத வித்வான்களை) வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்.

இனி, தமிழ் நாட்டையும், தமிழ் மொழியின் நலத்தையும் காக்கும் எண்ணமுள்ள பத்திரிகைகளும், எழுத்தாளர்களும், என் போன்ற இளைஞர்களும், தமிழகத்தின் தகைசான்ற அறிஞர்களையும், புலவர்களையும் குறித்து எழுதிவரவேண்டியது.

தமிழனைக் கேவலப்படுத்துகிற விழாக்களை விட்டொழித்து, பண்புடைய விழாக்கள் நடத்தித் தமிழ் மக்கள் பயன் பெறுதல் வேண்டும். அறிஞனைக் கொண்டாடுகிறோமென்றால் அது அந்த அறிஞனுக்குப் புகழ் யென்ற காரணத்தாலல்ல. "எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் இந்நாட்டு மன்னர்", என்ற பாரதியாரின் கருத்தைப் போல, வேதநாயகம் அவர்களை கொண்டாடுவதின் நோக்கம் "தமிழ் நாட்டின் மக்களில் பெரும்பாலோர் வேதநாயகம் அவர்களைப்போல சமரச அறிஞர்களாக வேண்டும்," என்பதுதான். ஆகையால் அவர்களைப் போற்றுவது தமிழர்களின் கடமை. வாழ்க தமிழிசை!



### நோட்டீசு

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

1945ஆ O. P. No. 20

1947ஆ I. A. No. 47

P. S. சேதுராமய்யங்கார் வகையரு } மனுதாரர்கள்

(1) P. S. சேஷய்யங்கார்
(2) S. முத்து லெக்ஷ்மி அம்மாள்
(3) R. அலமேலு அம்மாள் } எதிர் மனுதாரர்கள்

1வது மனுதாரின் குமாரன் லேட் ஜெகன்னாதய்யங்கார் பேரால் மனுவில் கண்டபடி Extended Succession Certificate கொடுக்க போடப்பட்ட மனு 31—3—47உ வாயிதா. ஆக்ஷேபணையை ஷை தேதியில் தெரிவித்துக்கொள்ளலாம்.

R. கிருஷ்ணசாமி,
வக்கீல்.

தேவகோட்டை
6—3—47

### விளம்பரம்

காரைக்குடி முனிசிபாலிடி

1947—48ம் வருஷத்தில் வண்டிகள் சைக்கிள்கள் முதலியவைகளுக்கு லைசென்ஸ் நம்பர் போடவும், நாய்களுக்கு லைசென்ஸ் நம்பர் பேட்ட தகடுகள் சப்ளைசெய்வதற்கும் 15—3—47உ மாலை 4மணிவரை டெண்டர்கள் வரவேற்கப்படும். டெண்டர் செய்துகொள்ள விரும்புபவர்கள் விபரங்களுக்கு 15—3—47உக்குள் முனிசிபலாபீசிலிருந்து நேரிலாவது எழுத்துமூலமாகவாவது தெரிந்துகொள்ளலாம்.

அட்வான்ஸ் தொகை ரூ. 10—0—0

ஜாமீன்தொகை ரூ. 30—0—0

(Sd) D. Thangiah, Commissioner.

கவனிக்கப்படாத
தொண்டைப்
புண்
நுரையிரல்
நோயை
உண்டாக்கலாம்

பெப்ஸ் கிருமிநாச சுவாச மாத்திரைகள் தொண்டைப் புண்ணை ஆற்றி அபாய கரமான கிருமிகளினால் உங்கள் சுவாசப்பை கெட்டுவிடாமல் காப்பாற்றுகின்றன. பெப்ஸ் வாயில் கரைந்தவுடன் சிறந்த மூலிகைச் சத்துக்களை வெளிவிடுகிறது. இந்த சத்துக்கள் சுவாசத்துடன் கலந்து சுவாசப் பைக்குள் நன்றாகப் பரவி, கிருமிகளைக் கொன்று, வீக்கமடைந்த பாகங்களைத் தணிக்கிறது. கபத்தைப் போக்கி, சுகமாகச் சுவாசிக்க உதவுகிறது. குளிர்ச்சி, இருமல், ஜலதோஷம், குளிர் ஜுரம், மார்சளி மற்ற மார் நோய்களுக்கு பெப்ஸ் மிகச்சிறந்த மருந்தென உலகெங்கும் புகழ்பெற்றது.

# PEPS

கிருமிநாச
சுவாச மாத்திரைகளைச் சாப்பிடுங்கள்
எப்பொழுதும் இருப்ப வைத்திருங்கள்.
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




## பரமகுடி

டி. மு கோர்ட்டு
O. S. No. 468 of 1933
E. P. No. 173 of 1946

சிவகெங்கை ராஜா } வாதி

திருப்புவனம் கிருஷ்ணய்யர் மகன் வெங்கிடாசல அய்யர் நாட்டரசன்கோட்டைராமுடு அய்யர் மகன் ஆதி நாராயண அய்யர், ஒருபோக்கி நாக லிங்க பண்டாரம் மகன் கொங்குபண்டாரம் } 9, 10, 11 பிரதிவாதிகள்

டிகிரி நம்பரில் நிறைவேறுதல் மனுக் கொடுத்து டிகிரி மனு 17—3—47வ வாய்தா. உங்களுக்கு ஆக்ஷேபணை இருந்தால் அன்று பகல் 10-மணிக்கு டிகிரி கோர்ட்டில் தெரிவித்துக்கொள் ளலாம்.

பரமகுடி 5—3—47. } S. தசரதராம ராஜூ வாதி ப்ளீடர்.

## காரைக்குடி நடராஜாவில்

## 14-3-47 வெள்ளிக்கிழமை முதல்

R. K. O. பிக்சர்ஸாரின் உன்னத தயாரிப்பு

# ஸ்பானிஷ் மெயின் (ஸ்டண்ட்)

SPANISH MAIN. இங்கிலீஷ் டெக்னிக் கலர் படம்.

பல நகரங்களிலும் புகழுடன் அனேக வாரங்கள் ஓடிய இப்படம், 4 நாள் மட்டும் நடைபெறுவதால் ஒவ்வொருவரும் குடும்பத்தினருடன் கண்டுகளிக்க வேண்டுகிறோம்.

## 18-3-47 செவ்வாய்க்கிழமை முதல் 3 நாள் மட்டும்

'DUMBO' 'டம்போ' (இங்கிலீஷ் முழு கலர் படம்.)

## பழனி, ஆர். எம். கே.

# தாம்பர பஸ்பம்

1. தீராத திமிர் குஷ்டம், கருங்குஷ்டம், கருமேகம் வெண்குஷ்டம், குன்மம், காசம், க்ஷயம், ஈளை இருமல் மந்தார காசம், சுவாச காசம், இரைப்பு, மூச்சு திணறுதல், கஷ்டஸ்வாசம், கோழை, கபக்கட்டு, அதனால் வரும் ஜுரம், இளைப்பு, இழுப்பு, வெட்டை முத்தி மொழிக்கு மொழி வலி, சூலைக்கட்டி, வீக்கம், செங்கிரந்தி வரிகிரந்தி சொரிகிரந்தி, கள்ளிப்பூ கிரந்தி, நமைச்சல் மேக ஊறல், மேகப்பத்து தடிப்பும் துவரம் பருப்புபோல் அதின் தோலில் ஒரு புண் வந்தால் வெடி சூலைப் புண்ணாகி பரவும். அது முத்தினால் சரீரமே கிரந்திப்பத்து விழுந்து பூரணமாக கஷ்டப்படுகிறவர்களும், வெட்டை முத்தி கிரந்திப்பத்து விழுந்து சூலை நீர் தங்கி நரம்புகள் பிடித்து கை கால் முடக்கிவிடும், பேக வியாதிகளும் இதில் அவசியம் தீரும். ஜுரம் 64-ம், ஜன்னி 13-ம் தோஷம் 7, வாயு 26, மேகம் 21, குஷ்டம் 18, சூலை 18, கிரந்தி 6, திமிர் 10, குன்மம் 8, இருமல் 16, காசம் 8, க்ஷயம் 8 மூலம் 9, பவுத்திரம் 6, அரயாப்பு 8, கண்டமாலை 9, கிராணி 6, விஷநீர் 9, விக்கல் 8, வெடிப்பு 10, ரணம் 10, வெள்ளை, வெட்டை, தந்தி மேகம், எரிச்சல், கடுப்பு, நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, ஆருதரை, புரை குழிப்புண் புற்று,சட்டி, பிளவு, காக்கை வலிப்புகள், பக்ஷவாதம், மதமதப்பு, கவுசி, வைற்றில் கெண்டை, ஜுரக் கட்டி கண்ணோய், கன்னப்புத்து, நாக்கை அரிக்கும் சிங்கி, ரணம் சூதகக் கட்டு, சூதகவாய்வு, சூதகத்திரட்டி சூதக சூலை, க்ஷயம், சூதக வயிற்று வலி முதலிய சகலவித கர்ம வியாதிகளும் கண்டிப்பாய்த் தீரும். அனு பவத்தில் கைகண்ட மகா அருமையான மருந்து.

கை கால் சொரணையற்று திமிர்த்து மதமதப்பேறி காது, மூக்கு, உதடு பெருத்து பாதமெல்லாம் வெடித்து குழிப்புண் புரைத்து புரையோடி, புழுத்து நாற்றமெடுத்து, சீழாய் கொட்டி, விரல்கள் அழுகி மத்து இத்து விழும் குஷ்ட ரோகங்களெல்லாம் சொஸ்தமாகி விட்டது. உள்ளங்கை நெளிந்து, விரல்கள் மடங்கிப்போன வர்களுக்கு மடங்கிய விரல்கள் நிமிர்ந்து மதமதப்பு மாறி சொரணை உண்டாகி விட்டது.

குழுகுழுவென்று அழுகிப்போன குஷ்டரோகங்களெல்லாம் சொஸ்தமாகிவிட்டதற்கு அடையாளமாக ஆயிரக்கணக்கான சர்ட்டிபிகேட்டுகளடங்கிய நற்சாக்ஷிப் புத்தகத்தைப் பாருங்கள். எழுதினால் மேற்படி புக் இனாமாக அனுப்பப்படும். கேட்லாக் இனாம்

50 நாள் தாம்பர பஸ்பம், பரங்கிப்பட்டை சூரணம் ரூ. 25—0—0

ஏழைகளுக்குப் பாதிவிலை கிடையாது. பிரபுக்களுக்குக் கிரயம் வேறு.

வைத்திய அசிரியர் **ஆர். எம் கே. வேலுசாமி**

சித்த வைத்தியசாலை, பழனி. S. I.

தேவையான மருந்துகள் பெற்றுக்கொள்ளலாம். மலாய் நாட்டிற்கு இந்திய சர்க்கார் நமது மருந்துகளை ஒவ்வொருவர் கோரும் மருந்திற்கும், லைசென்ஸ் பெற்று தபால் மூலியமாய் அனுப்ப வசதி கிடைத்துள்ளதால் தங்கள் அன்பான ஆர்டர்களை முன்பணத்துடன் எழுதும்படியாய்க் கேட்டுக்கொள்ளுகிறோம் R. M. K. V.

மலாய்நாட்டின் ஏஜண்டு:—மெசர்ஸ். மனோன்மணி புக் டிப்போ NO 54-பட்டுரோடு கோலாலம்பூர். (மலாயா)

# தங்கபஸ்பம்

புகையிலை

தங்கபஸ்பம்

N ஆறுமுகம் பிள்ளை
காரைக்குடி

## பொல்லாத நோய்

திமிர், குஷ்டம்
மதமதப்பு, பத்து
தடிப்பு, இரணம்
விஷகடிகள் முதலிய
கொடியவியாதிகளை

ஜி எம். சாமி
குரு தாம்பிர பஸ்பம்
கண்டிப்பாய்க்
குணப்படுத்துகிறது.
50 வேளை பஸ்பம் விலை ரூ 12-8-

மலையப்பசாமி வைத்தியசாலை
பழனி S.I.

Edited, Printed and Published by S. MURUGAPPAN at the Pandian Press, Magalir Illam, Amaravathipudur

